திருநெல்வேலி ஜில்லா

# பாபநாசத்தில் அந்தர்யோகம் - 20

## 29, 30, & 31—7—83

பொதியமலை அடிவாரத்தில் இருக்கும் பாபநாசம் க்ஷேத்திரத்தில் 1983 ஆம் ஆண்டு ஜூலை மாதம் 29ஆம் தேதி வெள்ளி, 30ஆம் தேதி சனி, 31ஆம் தேதி ஞாயிறு ஆகிய மூன்று நாட்களிலும் கீழ்க்கண்ட வாழ்க்கை முறைப்படி திருப்பராய்த்துறை ஸ்ரீ ராமகிருஷ்ண தபோவனம் ஸ்ரீமத் சுவாமி நித்தியானந்தர் அவர்கள் தலைமையில் அந்தர்யோகம் நடைபெறும். அம்பாசமுத்திரம் ரயில்வே ஸ்டேஷனிலிருந்து ஆறுமைல் தூரத்தில் பாபநாசம் க்ஷேத்திரம் இருக்கிறது.

அந்தர்யோகத்தில் கலந்துகொள்ள விரும்பும் அன்பர்கள் நபர் ஒன்றுக்கு ரு 30-00 விதம், திருநெல்வேலி ஜில்லா, அம்பாசமுத்திரம், நூல் ஜவுளி வியாபாரம், திரு. Sv. Rm. A. நடராஜ முதலியார் அவர்களுக்கு மணியார்டர் மூலமோ, நேரிலோ செலுத்திப் பெயர்களைப் பதிவுசெய்து, அனுமதிகார்டு பெற்றுக்கொள்ளவேண்டும். பதிவு பெற்ற முதல் 200 பேர்கள் மட்டுமே எடுத்துக் கொள்ளப்படுவார்கள். கலந்து கொள்ளாத அன்பர்களுக்குத் தொகை வாபஸ் செய்ய இயலாது. பதிவு செய்யப் பெற்றவர்களுக்குப் பதிலாக வேறு ஒருவர் எடுத்துக்கொள்ளப்படமாட்டார். பதிவு செய்துகொண்டவர்கள் அனைவரும் ஜூலை மாதம் 28ஆம் தேதி வியாழக்கிழமை மாலையே பாபநாசத்திற்கு வந்து சேரவேண்டும்.

தாய்மார்களும் இதில் கலந்துகொள்ளலாம். பன்னிரண்டு வயதுக்குக் கீழ்ப்பட்ட சிறுவர்களும், கைக்குழந்தைகளுடன் வரும் தாய்மார்களும், நடைமுறையைப் பின்பற்ற இயலாதவர்களும் இதில் சேர்த்துக்கொள்ளப்படமாட்டார்கள். தங்கள் சௌகரியத்திற்குத் தேவையான படுக்கை முதலியவற்றைத் தாங்களே கொண்டுவரவேண்டும்.

சென்னை, மதுரை, திருநெல்வேலி, நாகர்கோவில், திருக்குற்றாலம், தென்காசி, சங்கரன்கோவில் முதலிய இடங்களிலிருந்து பாபநாசத்திற்குப் போக பஸ்கள் கிடைக்கும். அம்பாசமுத்திரத்திலிருந்து பாபநாசத்திற்கு அடிக்கடி பஸ்கள் கிடைக்கும்.

### வாழ்க்கை முறை

| காலை | மணிமுதல் | மணிவரை | மாலை | மணிமுதல் | மணிவரை |
|---|---|---|---|---|---|
| துயில் எழுந்திருத்தல் | 5-00 | | போஜனம், ஓய்வு | 12-30 | 3-00 |
| எல்லாரும் ஒன்றுகூடி நாமஜபம் | 5-30 | 6-00 | மாலை உபந்யாசம் | 3-00 | 4-00 |
| நீராடல் முதலியன | 6-00 | 7-30 | தனியாக வாசித்தல் | 4-00 | 4-30 |
| காலை தியானம் | 7-30 | 8-00 | பானம், உலாவல், நீராடல் முதலியன | 4-30 | 6-15 |
| சிற்றுண்டி | 8-00 | 9-00 | நாமபஜம் | 6-15 | 6-45 |
| காலை உபந்யாசம் | 9-00 | 10-00 | தியானம் | 6-45 | 7-15 |
| மௌனம், உழவாரப்பணி | 10-00 | 11-00 | இரவு போஜனம் | 7-15 | 8-30 |
| பஜனை | 11 00 | 11-45 | சத் சம்பாஷணை | 8-30 | 9-30 |
| கோவில் வழிபாடு | 11-45 | 12-30 | | | |

குறிப்பு:— மூன்றாவது நாள் ஞாயிறு மாலை 5 மணியுடன் அந்தர்யோகம் முடிவு பெறும்.

காரியதரிசி
Sv. Rm. A. நடராஜ முதலியார், அம்பாசமுத்திரம்.

ஸதானந்த
ஸ்ரீ ராமகிருஷ்ண தபோவனம்

பாபநாசம் அந்தர்யோகத்தில் தபோவன வெளியீடுகள் விலைக்குக் கிடைக்கும்.

# தர்ம சக்கரம்

மாத சஞ்சிகை

| சக்கரம் 32 | ருத்ரோத்காரி ஹு ஆனி மீ | ஆரம் 6 |
|---|---|---|


## பொருளடக்கம்




## சந்தா விவரம்

டிபாஸிட் சந்தா: ரூ. 150 அனுப்பி இங்கு டிபாஸிட் செய்துவிட்டால் டிபாஸிட் இங்கு இருக்கும்வரையில் மாதந்தோறும் தர்ம சக்கரம் பத்திரிகை தங்களுக்கு வந்து கொண்டிருக்கும். ஆண்டுதோறும் சந்தா செலுத்திப் புதுப்பிக்கவேண்டியதில்லே. பத்திரிகை வேண்டாம் என்று கருதும்பொழுது டிபாஸிட்செய்த ரூபாய் நூற்றைம்பதை யும் திரும்பப் பெற்றுக்கொள்ளலாம். இந்தத் திட்டம் உள்நாட்டுக்கு மட்டும் உரியது.

ஆண்டு சந்தா: ரூ. 15 செலுத்தியது முதல் அல்லது அடுத்த மாதம் முதல் பன்னிரண்டு மாதங்களுக்கு ஒவ்வொரு தமிழ் மாதமும் முதல் தேதியில் கிடைக்கும்படி பத்திரிகை அனுப்பப்படுகிறது.

சகாய சந்தா: மாத வருவாய் ரூ. 200 அல்லது ஆண்டு வருவாய் ரூ. 2400க்கும் குறைவாக உள்ளவர்கள் ஆண்டு சந்தா பதிஞைந்து செலுத்த இயலாது இருந்தால் ரூபாய் பத்து அனுப்பலாம். பாக்கி ரூபாய் ஐந்தைப் பாண்டிச்சேரி S. விஸ்வநாதன் 'தர்ம சக்கர உதவிநிதி' யினின்று ஈடுசெய்து கொள்கிறோம். தெய்விக விஷயமாதலால் ரூ. 15 செலுத்த இயலுகிறவர்கள் இந்தச் சலுகையைப் பயன்படுத்தவேண்டாம்.

தமிழ் நாட்டிலும் பாண்டிச்சேரியிலும் உள்ள அரசாங்கப் பொது நூலகங்கள் அனைத்துக்கும் தர்ம சக்கரம் அன்பர்களின் உதவியால் தொடர்ந்து அனுப்பப்பெறு கிறது. நூலக நிர்வாகியிடம் கேட்டுப்பெற்றுப் படித்துப் பயனடையக் கோருகிறோம்.

உள்நாடு தனி இதழ் ரூ. 1-50 வெளிநாடு தனி இதழ் ரூ. 3-00

**உள்நாடு வருட சந்தா: ரூ. 15-00 வெளிநாடு வருட சந்தா: ரூ. 35-00**

## அந்தர்யோக விவரங்கள்

**மதுரை ஜில்லா—சின்னமனூரில் 18—6—83 சனிக்கிழமை**

இடம்: ஆர்ய வைசியர் சத்திரம், தெற்கு ரதவீதி
நேரம்: காலை 10-00 மணிமுதல் மாலை 4-30 மணிவரை
நடத்துபவர்: ஸ்ரீமத் சுவாமி போதானந்தர்

**மதுரை ஜில்லா—திருமங்கலத்தில் 19—6—83 ஞாயிற்றுக்கிழமை**

இடம்: ஸ்ரீ ராமகிருஷ்ண-விவேகானந்த தபோவனம்
நேரம்: காலை 10-00 மணிமுதல் மாலை 4-30 மணிவரை
நடத்துபவர்: ஸ்ரீமத் சுவாமி போதானந்தர்

**கோவை ஜில்லா—அன்னூரில் 19—6—83 ஞாயிற்றுக்கிழமை**

இடம்: ஸ்ரீ ராமகிருஷ்ண ஆச்ரமம்
நேரம்: காலை 10-00 மணிமுதல் மாலை 4-30 மணிவரை
நடத்துபவர்: ஸ்ரீமத் சுவாமி நித்தியானந்தர்

**மதுரை ஜில்லா—திருவேடகத்தில் 10—7—83 ஞாயிற்றுக்கிழமை**

இடம்: விவேகானந்த கல்லூரி
நேரம்: காலை 10 மணிமுதல் மாலை 4-30 மணிவரை
நடத்துபவர்: ஸ்ரீமத் சுவாமி சித்பவானந்தர் அவர்கள்
உணவு வசதி: பகல் உணவு ரூ. 1-50; மாலை சிற்றுண்டி ரூ. 1-00 நேரில்செலுத்தவும்.

**தர்மபுரி ஜில்லா—பாப்பாரப்பட்டியில் 10—7—83 ஞாயிற்றுக்கிழமை**

இடம்: பழைய சுப்பிரமணிய சுவாமி கோவில்
நேரம்: காலை 10-00 மணிமுதல் மாலை 4-30 மணிவரை
நடத்துபவர்: ஸ்ரீமத் சுவாமி நித்தியானந்தர்

**பெரியார் ஜில்லா—அம்மாப்பேட்டையில் 10-7-83 ஞாயிற்றுக்கிழமை**

இடம்: ராமகிருஷ்ண ஞானயோக தபோவனம்
நேரம்: காலை 10-00 மணிமுதல் மாலை 5-00 மணிவரை
நடத்துபவர்: ஸ்ரீமத் சுவாமி துருவானந்தர்

**தர்மபுரி ஜில்லா—பாலஜங்கமனஹள்ளியில் 11—7—83 திங்கட்கிழமை**

இடம்: அருள்மிகு பச்சையம்மன் தேவஸ்தானம்
நேரம்: காலை 10-00 மணிமுதல் மாலை 4-30 மணிவரை
நடத்துபவர்: ஸ்ரீமத் சுவாமி நித்தியானந்தர்

**இராமநாதபுரம் ஜில்லா—விருதுநகரில் 17—7—83 ஞாயிற்றுக்கிழமை**

இடம்: பெரிய காளியம்மன் கோவில்
நேரம்: காலை 10-00 மணிமுதல் மாலை 4-30 மணிவரை
நடத்துபவர்: ஸ்ரீமத் சுவாமி நித்தியானந்தர்

---

அந்தர்யோக நடைமுறையில் நாமஜபம், தியானம், உபந்யாசம், மௌனம், ஸத்ஸம்பாஷணை முதலியவை அடங்கும். உபந்யாசங்கள் யோகம், பக்தி, ஞானம் முதலியவைகளைப்பற்றி நடைபெறும். ஸத்ஸம்பாஷணையில் அன்பர்கள் தங்கள் சந்தேகங்களை நீக்கிக்கொள்ளலாம். விருப்பமுள்ள அன்பர்களும், தாய்மார்களும் அந்தர்யோகங்களில் கலந்துகொள்ளலாம். ஆனல் கைக்குழந்தைகளுடன்வரும் தாய்மார்களும், பன்னிரண்டு வயதிற்குக் கீழ்ப்பட்ட சிறுவர்களும் கலந்துகொள்ள அனுமதிக்கப்படமாட்டார்கள்.



प्रज्ञानं ब्रह्म


# தர்ம சக்கரம்


அறவாழி அந்தணன் தாள்சேர்ந்தார்க்(கு) அல்லால்
பிறவாழி நீந்தல் அரிது.


சக்கரம் 32 | ருத்ரோத்காரி ஹூ ஆனி மீ | ஆரம் 6


## பிரார்த்தனை

न जातोऽहं मृतो वापि न मे कर्म शुभाशुभम् ।
विशुद्धं निर्गुणं ब्रह्म बन्धो मुक्तिः कथं मम ॥

— अवधूतगीता

*ந ஜாதோऽஹம் ம்ருதோ வாபி ந மே கர்ம சுபாசுபம் ।
விசுத்தம் நிர்குணம் ப்ரஹ்ம பந்தோ முக்தி: கதம் மம ॥*

*— அவதூதகீதை*

எனக்குப் பிறப்பு இறப்பு இல்லை; நலனும் கேடும் என்னை வந்து தாக்கமாட்டா. நான் விசுத்தனும் நிர்க்குணனுமாகிய பிரம்ம சொருபம். எனக்குப் பந்தமும் மோட்சமும் எப்படி வந்து அமையப் போகின்றன?

பறவைஏறு பரம புருடா! நீஎன்னைக் கைக்கொண்டபின்
பிறவிஎன்னும் கடலும் வற்றிப் பெரும்பதம் ஆகின்றதால்
இறவுசெய்யும் பாவக்காடு தீக்கொளீஇ வேகின்றதால்
அறிவை என்னும் அமுதஆறு தலைப் பற்றி வாய்க்கொண்டதே.

*— பெரியாழ்வார் திருமொழி*

# அருள் விருந்து



ஆசையை அகற்றியவனுக்குத் துயரம் ஏதுமில்லை.

அறநெறி மந்த அதிகாரியையும் காப்பாற்றுகிறது.

பெருநெறியினின்று நான் யாண்டும் பிசகாதிருப்பேனாக.

பொறுமையுடன் கூடிய தளரா முயற்சியே வெற்றிக்கு வித்தாம்.

சுயநலப்பற்று அற்றவனுக்கே செயற்கரிய செயல் சாத்தியமாகிறது.

சான்றோர் வசிக்குமிடம் எங்கிருந்தாலும் அது புனிதம் நிறைந்ததே.

சஞ்சலம் பொல்லாத நோய். பகவத் சிந்தனையில் சஞ்சலத்தை ஒழி.

பண்பாட்டில் முன்னேறியிருப்பவனிடம் தெய்வீக மகிமை திகழ்கிறது.

உன் செயலனைத்தும் பேரன்பை ஆதாரமாகக் கொண்டு நிகழ்வது ஆகுக.

சுகபோகத்தை ஒதுக்கியவன் எக்காரணத்தை முன்னிட்டும் விசனப்படுவதில்லை.

பரமனை முற்றிலும் சார்ந்திருப்பவனுக்குத் தோல்வி என்பது இல்லவே இல்லை.

பரமனைச் சார்ந்திருக்க இயலாதவன் சுய முயற்சியையாவது கையாளுதல் உசிதம்.

விருப்பையும், வெறுப்பையும் அறவே ஒதுக்கியவனுக்கு மன அமைதி தானாக வந்தமைகிறது.

கொண்டுள்ள இலட்சியத்தில் தீவிரமாகக் கருத்தைச் செலுத்து. அசைக்க முடியாத அக்கருத்தே வெற்றிக்கு வித்தாம்.

பிறரிடம் வெறுப்புக் கொள்ளாதிருப்பதும் சினந்து கொள்ளாதிருப்பதும் பேரன்பே பூண்டிருப்பதும் அஹிம்சைக்கு வித்தாம்.

நீந்தத் தெரியாதவன் நீரினுள் வீழ்ந்தால் அமைதியுடன் இருப்பானாகில் அவன் மூழ்கிப் போகமாட்டான். ஆனால் அவனுடைய திண்டாட்டமே அவனை மூழ்கடிக்கிறது. அதே பாங்கில் ஆசை பிடித்துள்ள மனிதனுடைய ஆசையே அவனை மூழ்கிப் போகும்படி செய்கிறது.

---

## பரமஹம்சர் புகட்டிய

# பெருநெறி விளக்கம்

கிருஷ்ணனுக்கு வளர்ப்புத் தாய் யசோதை என்ன பாங்கில் பணிவிடை செய்யவேண்டுமென்பதை ராதையிடம் தெரிவித்தாள். அவளுடைய மனப்பான்மையைப் படம் பிடித்துக் காட்டிய பரமஹம்சதேவருக்குச் சமாதிநிலை கூடும் பாங்குகள் தென்பட்டன. ஆயினும் ஏதோ ஒருபோக்கில் அவர் அப்பரவச நிலையைத் தடைப்படுத்திக்கொண்டார். அதன் பொருட்டுத் தம் மனப்பான்மையை அவர் மாற்றிக் கொண்டார். திடீரென்று அவர் இயம்பியதாவது: "காளிகா தேவியைச் சம்ஹாரமூர்த்தி என இயம்பலாம். இல்லை, அவள் எனக்குச் சம்ஹாரமூர்த்தி ஆகாள். யாண்டும் என்னைக் காத்தருளும் அன்னையாக அவள் இலங்கி வருகின்றாள்."

இங்ஙனம் தம்மிடத்து ஊற்றெடுத்துக் கிளம்பிய பாவ சமாதியைச் சமாளித்துக்கொண்டு யசோதையைப் பற்றி மேலும் சில அரிய பெரிய கருத்துக்களை இயம்ப அவர் திருவுளம் கொண்டார். ஆனால் அதற்குள் முகர்ஜி சகோதரர்கள் இருவரும் அப்பொழுது அங்கு வந்து சேர்ந்தார்கள். அவர்களுடைய வரவை முன்னிட்டுப் பரமஹம்சதேவருக்குத் தம் மனப்பான்மையை மாற்றி அமைத்துக்கொள்வது சுலபமாயிற்று. மகேந்திரநாத் முகர்ஜியும் இடையிடையே பரமஹம்சதேவரைத் தரிசிக்க வருவதுண்டு. மூத்தவராகிய மகேந்திரர் மாவு அரைக்கும் கிடங்கு ஒன்று வைத்திருந்தார். அதனோடு கூட வேறு சில வர்த்தகங்களையும் அவர் செய்து வந்தார். அவருடைய தம்பியோ ஒரு பொறியியல் வல்லுநர் (Engineer) ஆவார். இருவரும் நடாத்தி வந்த வர்த்தகங்களில் பொறுப்பு நிறைந்த நல்ல மக்களை நியமித்திருந்தனர். ஆதலால் வேறு பல காரியங்களை முன்னிட்டு இடையிடையே அவர்கள் வெளியே செல்லும்வேளையிலும் அவர்களுடைய சிப்பந்திகள் காரியங்களைக் கவனத்துடன் கவனித்து வந்தனர். மகேந்திரருக்கு வயது முப்பத்தேழு. தம்பியோ அவருக்கு இரண்டு வயது இளையவராயிருந்தார். நாட்டுப் புறப்பகுதியில் கடேட் என்னுமிடத்தில் அவர்களுடைய சொந்த வீடு இருந்தது. அதைத் தவிர கல்கத்தாவில் பாக்பஜார் என்னும் பகுதியிலும் அவர்களுக்குச் சொந்தமான வீடு ஒன்று இருந்தது. அவ்விருவரும் பரமஹம்சதேவரைத் தரிசிக்க வரும் பொழுதெல்லாம் ஹரி என்ற பெயர் படைத்திருந்த மற்றோர் இளைஞன் அவர்களோடு கூடி தக்ஷிணேசுவரத்துக்கு வருவதுண்டு. ஹரியோ மணம் புரிந்து கொண்டவன். ஆயினும் பரமஹம்ச தேவரிடம் அவன் பக்தி மிகப் பூண்டிருந்தான். இம்மூவரும் தக்ஷிணேசுவர ஆலயத்துக்கு வந்து நாட்கள் பல கடந்து போய்விட்டன. இப்பொழுது வந்திருந்த மூவரும் பரமஹம்சதேவர் முன்னிலையில் வீழ்ந்து வணங்கினர்.

பரமஹம்ச தேவர்: "ஆ! வந்திருக்கிறீர்களா? நீங்கள் தட்சிணேசுவரத்துக்கு வந்து நெடு நாட்களாகி விட்டன."

மகேந்திரர்: "ஐயனே! நான் கல்கத்தாவினின்று என் சொந்த ஊராகிய கடேட்டிற்குச் சென்றிருந்தேன். அதனால்தான் நான் நெடு நாட்களாக இங்கு வரவில்லை."

பரமஹம்சதேவர்: "உனக்கு மகப்பேறு ஏதுமில்லை. பிறருக்கு நீ பணிவிடையில் அடிமைப்பட்டவன் அல்லன். அப்படியிருந்தும் நிற்க நேரம் இல்லாமல் நீ அலைந்து திரிகின்றாய். இது என்ன விந்தை!"

வந்திருந்த பக்தர்கள் மூவரும் அமைதியுற்றிருந்து பரமஹம்சர் பகர்ந்த கருத்தை ஏற்றுக்கொண்டனர். ஆயினும் பரமஹம்ச தேவருடைய கூற்று மகேந்திரரைச் சிறிது சங்கடத்தில் ஆழ்த்தியது.

மகேந்திரரிடம் பரமஹம்சர் கூறியதாவது: "நான் இங்ஙனம் ஏன் உன்னிடம் பகர்கிறேன் என்று உனக்குத் தெரியுமா? நீ ஊக்கமும் உள்ளன்பும் பரந்த மனப்பான்மையும் படைத்தவன். கடவுளிடம் நீ பக்தி பூண்டு ஒழுகுகின்றாய்."

மகேந்திரர்: "ஐயனே! என்னுடைய நன்மைக்காகவென்று தாங்கள் இங்ஙனம் பகர்ந்

தருள்கின்றீர்கள்."

புன்னகை பூத்தவராகப் பரமஹம்சதேவர் பகர்ந்ததாவது: "ஆங்குக் கமார்ப்புகூரில் ஏதாவது நிகழ்ச்சி நிகழ்ந்தால் அதை முன் விட்டு நாங்கள் நிதி திரட்டுவதில்லை. ஜாதுவினுடைய அன்னை என்னிடம் இயம்பியதாவது: 'ஏனைய சாதுக்கள் ஏதாவது பணம் தர வேண்டுமென்று சதா கேட்டுக்கொண்டிருக்கின்றனர். நீங்களோ அஃதொன்றும் செய்வதில்லை.' கையை விட்டுப் பணத்தைச் செலவு பண்ணவேண்டிய நிர்ப்பந்தம் வந்தால் உலகத்தவர் அதைக் குறித்துச் சங்கடப்படுகின்றனர்.

"ஓரிடத்தில் நாடகம் ஒன்று நடிக்கப்பட்டது. அங்குப் பண வசூலும் நிகழ்ந்துகொண்டிருந்தது. உலோபியாகிய ஒருவன் உள்ளே சென்று பார்த்தான். பணம் வசூலிக்கப்படுவதைப் பார்த்ததும் அம்மனிதன் அங்கிருந்து வெளியே போய்விட்டான். மற்றோர் இடத்தில் வேறு ஒரு நாடகம் நடிக்கப்பட்டது. அங்குப் பண வசூல் கிடையாது என்ற செய்தி அவன் காதுக்கு எட்டியது. அங்குத் திரள் திரளாக மக்கள் வந்து கூடினர். அவர்களுக்கிடையில் முட்டி மோதிக்கொண்டு இந்த உலோபி நாடக மண்டபத்தின் நடுவே நல்லதோர் இடம் பிடித்துக்கொண்டான். மீசையை முறுக்கிக் கொண்டு நாடகம் முடியும் பரியந்தம் ஆங்கு அவன் அமர்ந்திருந்தான். (இதைக் கேட்டு எல்லாரும் நகைத்தார்கள்.)

"உமக்கு ஆவலை உண்டுபண்ணும்படி மகப்பேறு ஏதும் வந்தமைவதில்லை" என்று மகேந்திர முகர்ஜியிடம் பரமஹம்ச தேவர் பகர்ந்தார். அத்துடன் மற்றொரு விஷயத்தையும் அவர் குறிப்பிட்டார். "மாதம் ஒன்றுக்கு எண்ணூறு ரூபாய் சம்பளம் வாங்குகிற மாஜிஸ்திரேட் ஒருவனை நான் அறிவேன். நிகழ்ச்சி ஒன்றைப் பார்க்க அவன் கேசவ சந்திரசேனர் வீட்டுக்குச் சென்றான். நானும் அங்குச் சென்றிருந்தேன். ராக்காலும் இன்னும் சில பக்தர்களும் என்னுடன் அங்கு வந்திருந்தார்கள். அவர்கள் எனக்கு அருகில் அமர்ந்துகொண்டிருந்தனர். சிறிது நேரத்திற்குப் பிறகு ஓர் அவசரக் காரியமாக ராக்கால் கொஞ்ச நேரம் தன் இடத்தைக் காலி செய்துவிட்டு வெளியே சென்றிருந்தான். அத்தருணத்தில் அந்த மாஜிஸ்திரேட் அந்த இடத்துக்கு நகர்ந்து வந்து ராக்கால் இருந்த ஆசனத்தில் தன் மகனை அமர்ந்திருக்கச் செய்தான். 'அந்த இடம் வேறு ஒருவருக்கு உரியது' என்று நான் இயம்பினேன். அப்படி இயம்புதற்கு ஏற்ற மனநிலையை நான் அப்போது படைத்திருந்தேன். ஆதலால் ராக்காலைப் பழையபடி எனக்கு அருகில் அமர்ந்திருக்கப் பண்ணினேன். நிகழ்ச்சிகள் நடைபெற்றுக்கொண்டிருந்த காலம் முழுதும் அந்த மாஜிஸ்திரேட் நிகழ்ச்சியையும் பார்க்கவில்லை; வேறு எக்காரியமும் செய்யவில்லை. தன் மகனோடு கொஞ்சிக் கொண்டிருந்த ஒரே செயலில்தான் அவன் ஈடுபட்டான். அம்மடையன் கலாநிகழ்ச்சியில் ஒரு சிறு பகுதியிலும் தன் கருத்தைச் செலுத்தவேயில்லை. தன் மனைவி ஆட்டுவித்தபடி ஆடக்கூடியவன் என்றும் அம்மனிதனைப் பற்றிக்கேள்விப்பட்டேன். தன் இல்லாள் ஆணைப்படி அப்பிரகிருதியானவன் நிற்கவும் அமர்ந்திருக்கவும் செய்கிறான். குரங்குத் தனம் படைத்திருந்த தன் மகன்மீதே அவன் கருத்தைச் செலுத்திக்கொண்டிருந்ததனால் அந்நிகழ்ச்சி எதையும் கருத்தில் வாங்கிக்கொள்ளவில்லை."

மகேந்திர முகர்ஜியிடம் பரமஹம்ச தேவர் பகர்ந்ததாவது: "நீ தியானம் பண்ணுவது உண்டா?"

மகேந்திரர்: "ஆம் ஐயனே! ஏதோ சிறிதளவு பயின்று வருகிறேன்."

பரமஹம்சதேவர்: "இடையிடையே தட்சிணேசுவர ஆலயத்துக்கு நீ வந்து கொண்டிருப்பாயாக."

மகேந்திரர்: "ஆம் ஐயனே! நான் அங்ஙனமே செய்கிறேன். முடிச்சுக்களும் கோணல்களும் என் உள்ளத்தில் எங்கே இருக்கின்றன என்பதைத் தாங்கள் நன்கு அறிகிறீர்கள். அவைகளைச் சரிபடுத்துவதும் தங்களுக்கே சாலும்."

புன்னகையுடன் பரமஹம்ச தேவர் பகர்ந்ததாவது: "முதலில் தட்சிணேசுவர ஆலயத்துக்கு வந்து சேர். பிறகு உன்னைப் பரிசோதித்துப் பார்த்துக் கோணல்கள் எங்கே இருக்கின்றன என்பதைச் சுட்டிக்காட்டுகிறேன். தட்சிணேசுவர ஆலயத்துக்கு நீ ஏன் வராதிருக்கின்றாய்?"

மகேந்திரர்: "பலப்பல அலுவல்களை முன்னிட்டும் இடையிடையே நாட்டுப் புறத்திலிருக்கும் என் வீட்டுக்குப் போவதை முன்னிட்டும் நான் அடிக்கடி தட்சிணேசுவர ஆலயத்துக்கு வர இயலவில்லை." அங்கு அமர்ந்திருந்த பக்தர்களைச் சுட்டிக்காட்டி பரமஹம்ச தேவர் பகர்ந்ததாவது: "இவர்களுக்கு இங்கு வருவதைத்தவிர வேறு அலுவல் எதுவும் இல்லையா? செல்லுதற்கு உனக்கு இடம் இருப்பது போன்று இவர்களுக்குச் செல்லுதற்கு இடமே இல்லாது போய்விட்டதா? அப்படியிருந்தும் அவர்கள் ஒழுங்காக வருகின்றார்கள் அல்லவா? நீ மட்டும் ஏன் இப்படிச் சாக்குச் சொல்லுகின்றாய்?"

மகேந்திர முகர்ஜியுடன் வந்திருந்த ஹரியைப் பார்த்துப் பரமஹம்சர் பகர்ந்ததாவது: "நீ ஏன் தட்சிணேசுவர ஆலயத்துக்கு வருவதில்லை? உன் மனைவி உன்னுடன் வசித்துக் கொண்டிருக்கின்றாளா?"

ஹரி: "இல்லை ஐயனே."

பரமஹம்சதேவர்: "அப்படியானால் இங்கு வருவதை நீ ஏன் நிறுத்திவிட்டாய்?"

ஹரி: "ஐயனே, நான் சிறிது உடல் நலம் குன்றியிருந்தேன்."

பரமஹம்சதேவர் பக்தர்களிடம் பகர்ந்ததாவது: "இவன் உருவத்தில் மெலிந்தவனாகத் தென்படுகிறான். ஆயினும் பக்தியில் இவன் குறைந்தவன் அல்லன். பக்தி இவனிடம் ததும்பிக்கொண்டிருக்கிறது. ஆயினும் அவன் படைத்துள்ள பக்தியில் போராட்டமும் சேர்ந்து அமைந்திருக்கிறது."

(இதைக் கேட்ட பக்தர்கள் நகைக்கின்றார்கள்) பக்தர் ஒருவருடைய மனைவியைக் குறித்துப் பரமஹம்சர் பேசியபொழுதெல்லாம் அவளை அவர் 'ஹரியின் தாயார்' என்று இயம்புவார். அந்த மாதின் சகோதரன் கல்லூரியில் படித்துக்கொண்டிருந்தான். அவனுக்கு வயது சுமார் இருபது. அன்னவனும் ஆங்குப் பரமஹம்சர் முன்னிலையில் அமர்ந்திருந்தான். கிரிக்கெட் பந்தாடுதற்குப் புறப்பட்டுப் போக அவன் ஆயத்தமானான். அவனுடைய தம்பி துவிஜன் என்பவனும் பரமஹம்ச தேவரிடம் பக்தி பூண்டிருந்தான். சகோதரர்கள் இருவரும் அங்கிருந்து புறப்பட்டு வெளியேகினர். சில நிமிடங்களுக்குப் பிறகு இளையவனாகிய துவிஜன் திரும்பி வந்துசேர்ந்தான். "நீ ஏன் போகவில்லை?" என்று பரமஹம்சர் அவனைக் கேட்டார். இக்கேள்விக்கு விடையாகப் பக்தர் ஒருவர் பகர்ந்ததாவது: "அவன் இங்கு நிகழ்வதற்கு இருக்கின்ற இன்னிசையைக் கேட்க விரும்புகிறான். ஒருவேளை அவன் திரும்பி வந்ததற்குக் காரணம் இதுவாக இருக்கலாம்."

பிரம்ம சமாஜத்து அங்கத்தினராகிய திரைலோக்கியர் இன்னிசை பாடுவதில் வல்லுநராய் இருந்தார். அவர் வரவை எல்லாரும் எதிர்பார்த்துக்கொண்டிருந்தார்கள். பால்த்து என்னும் பக்தரும் அங்கு வந்து சேர்ந்தார். பூரணன் என்ற பெயர் படைத்திருந்த மற்றொரு பக்தனும் அங்கு வந்து சேர்ந்தான். அவனை அங்கு வந்து சேரும்படி செய்வதில் பரமஹம்ச தேவருக்குச் சிறிது சிரமம் இருந்தது. அவ்விளைஞன் தட்சிணேசுவர ஆலயத்துக்கு வருவதைக் குறித்து அவனுடைய உற்றார் உறவினர் ஆட்சேபணை மிகச் செய்தனர். மகேந்திர நாத குப்தர் நடத்திவந்த உயர்நிலைப் பள்ளியில் அவ்விளைஞன் படித்து வந்தான். அவன் உள்ளே வந்ததும் பரமஹம்சர் முன்னிலையில் வீழ்ந்து வணங்கினான். அவனைத் தம் அருகில் அமரச்செய்த பரமஹம்சதேவர் அவனுடன் அடங்கிய குரலில் உரையாடினார்.

பரமஹம்சதேவர் பூரணனிடம் பகர்ந்ததாவது: "சற்று அருகில் வா." கிரீஷ்சந்திர கோஷர் இவ்விளைஞன் யார் என்று மகேந்திரரிடம் கேட்டார். இவ்விளைஞன் மற்றவர்களுடைய பார்வையில் படாதிருப்பது நல்லது என்று மகேந்திரர் கருதினார். இவனுடைய வருகையைக் குறித்து மற்றவர்கள் அறிவார்களாகில் வீட்டில் ஏதாவது அவனுக்கு உபத்திரவம் உண்டாகும். அதற்கெல்லாம் காரணம் மகேந்திரர் என்று அவர்மீது குற்றம் சாட்டப்படும். "அவன் ஓர் இளைஞன் என்பது உமக்குத் தெரியவில்லையா?" என்று மகேந்திரர் சிறிது ஆத்திரத்துடன் கேட்டார்.

கிரீஷர்: "அவன் ஓர் இளைஞன் என்பதை எனக்குத் தெரிவிப்பதற்குப் பிசாசு ஒன்றும் தேவையில்லை." பரமஹம்சரும் பூரணனும் அடங்கிய குரலில் பேசிக்கொண்டிருந்தனர்.

# எந்நாள் கண்ணி

(தாயுமானவர் இயற்றியது)

**9-7. நானெனும் தன்மை நழுவியே எவ்வுயிர்க்கும்**
**தானெனும் உண்மைதனைச் சாருநாள்**
**[எந்நாளோ.**

சிஷ்யன் ஒருவன் குருவைப் பார்த்து'ஐயனே, கடவுளின் காட்சி எனக்கு எப்பொழுது கிட்டும்? என்று கேட்டான். "என்றைக்கு உன்னை நீ ஒரு தனி வியக்தியாகப் பாவித்துக் கொண்டு அதை நான் என்று அழைத்துவரும் செயலை ஒதுக்கித் தள்ளி விட்டு அந்த ஜீவ வியக்தியையும் ஒதுக்கித் தள்ளுவாயாகில் அப்பொழுது நீ பரமனைத் தரிசிப்பாய்" என்றார் குரு. ஆக மெய்ப்பொருள் காட்சிக்கும், ஜீவாத்மனுக்கும் இடையில் இடைஞ்சலாய் நின்று கொண்டிருப்பது நான் என்னும் அகங்காரமாம். தான் அல்லாத உடலைத் தான் எனக் கருதுவது அகங்காரம். அப்பொழுது உடலின் கூறுகள் அனைத்தும் தனக்குச் சொந்தமென அகங்கரிக்கின்ற ஜீவன் கருதிக்கொள்கிறான். அந்நிலையில் இருந்துகொண்டு அவரவர் அனுபவிக்கின்ற இன்பதுன்பங்களுக்குக் காரணம் தான் அபிமானிக்கின்ற பிரகிருதியின் கூறுகளேயாம். ஆத்மா குட்டையானதும் அன்று, நெட்டையானதும் அன்று. குட்டை, நெட்டை ஆகிய கூறுகள் உடலுக்குண்டு. அத்தகைய உடலைத் தான் என்று அக்ஞானத்தில் இருக்கும் ஜீவாத்மன் அபிமானிக்கின்றான். மற்றவர்கள் அவ்வுடலின் பாங்கைப் போற்றினால் அப்போற்றுதல் தனக்கு உரியது என்று அவன் மகிழ்வடைகிறான். அதைத் தூற்றினால் தான் சிறுமைப்படுத்தப்பட்டதாக எண்ணி அவன் துயருறுகிறான்.

இனி நான் என்னும் பதம் ஜீவாத்மன் அகங்கரித்துக்கொள்கிற சரீரத்துக்குரியதாம். மற்றுத் தான் என்னும் பதம் மெய்ப்பொருளாகிய பரமனுக்கு உரியதாம். பரம்பொருள் அனைத்துக்கும் சொந்தம். அதற்கு மாறாக ஜீவாத்மன் தனக்குத்தானே சொந்தமாக்கிக் கொள்கின்றான்; பரமனுக்கும் சொந்தம் என இடையிடையே எண்ணுகிறான். பின்பு நான் என்னும் பதம் எப்பொருளோடும் சேர்ந்திருந்து அதன் மயமாவது கிடையாது. கையாளும் சொல்லிலேயே இவ்வுண்மை புதைந்திருக்கிறது என்பதை இப்பொழுது ஆராய்வோம். நான்தான் அதைப் பார்த்தேன் என்று சொல்லுமிடத்து நான் என்னும் ஜீவனுக்குரிய சொல் பரத்துக்குரிய சொல்லாகிய தான் என்பதோடு இயல்பாக ஒட்டுகிறது. பின்பு பரத்தைக் குறிக்கும் சொல்லாகிய தான் என்பது நான்தான், அவன்தான், அவள்தான், அதுதான் என விரிவடைந்து அனைத்தையும் தன்மயமாக்குகிறது. நான் என்னும் சொல் அப்படிச் செய்யாது. ஆகவே ஜீவாத்மன் என்றைக்குத் தான் அல்லாத உடலின்மீது வைத்துள்ள அபிமானத்தைத் துடைத்துத் தள்ளுகிறானோ அன்றைக்கு அவன் பரம்பொருளே அனைத்துமாய் இலங்குகிறது என்னும் உண்மையை அநுபூதியில் அறிந்துகொள்ளத் தகுதி உடையவன் ஆகிறான்.

**9-8. சிந்தை பறந்து திருஅருளாய் நிற்பவர்பால்**
**வந்தபொருள் எம்மையும்தான் வாழ்விப்பது**
**எந்நாளோ.**

ஜீவாத்மன் மனதோடு கூடியிருப்பதும் உடலைத் தான் என்று அகங்கரிப்பதும் அவனுடைய ஜீவ வியக்தியை வளர்த்து வருகின்றன. மனதற்ற நிலையை அவன் தாற்காலிகமாகச் சுஷுப்தி அவஸ்தையில் பெறுகிறான். கனவற்ற அயர்ந்த உறக்கமே சுஷுப்தி அவஸ்தை எனப்படுகிறது. அந்நிலையில் ஜீவாத்மனுடைய தனி வியக்தியும் மறைந்து பட்டுப் போகிறது. தனக்குத் தானே அவன் உண்டுபண்ணிக்கொண்ட வியவகாரங்களும் உடைமைகளும் அவன் உள்ளத்தினின்று மறைந்துபட்டுப் போகின்றன. இந்நிலையை ஜீவாத்மன் நனவில் விழித்திருக்கும் பொழுது உண்டுபண்ணிக்கொள்வானாகில் அவன் நல்ல ஆத்மசாதகன் ஆகிறான்.

பரவஸ்துவிற்குப் புறம்பாக ஜகத்தும் இல்லை, ஜீவனும் இல்லை. ஆயினும் ஜகத்தையும் ஜீவனையும் தனித்தனிப்பொருள்களாக ஜீவாத்மன் சிருஷ்டித்துக்கொள்கிறான். அது அவன் படைத்துள்ள அக்ஞானத்தின் விளைவு. மனோநாசம் பண்ணுதற்கு ஏற்ப இந்த அக்ஞான

நிலையும் வடிவற்றதாகிறது. மனது அறவே துடைக்கப்படுங்கால் ஜகத்தும் அதை உண்டு பண்ணிக்கொண்ட ஜீவனும் மறைந்துபட்டுப் போகின்றன. பரவஸ்து ஒன்றே அந்நிலையில் யாண்டும் எஞ்சியிருக்கிறது. இப்பரவஸ்துவோ ஜாக்ரதம், சொப்பனம், சுஷுப்தி ஆகிய மூன்று அவஸ்தைகளுக்கும் பொதுவானது. ஆக அதுவே ஜீவாத்மனுடைய நிஜ நிலையாகிறது. மனம்போனவிடத்து அதில் ஜீவவியக்தி ஒன்றுபடுகிறது. அதை அடையத் தீவிரமாக முயல்வதே ஜீவாத்மன் செய்கிற செயல்களுள் எல்லாம் அரிய பெரிய செயலாம்.

**9-9. எள்ளுக்குள் எண்ணெய்போல் எங்கும் [வியாபகமாய்**
**உள்ளஒன்றை உள்ளபடி ஒருநாள் எந்நாளோ.**

எள்ளாகவும் எண்ணெயாகவும் இலங்குகின்ற பொருள் ஒன்றே. அதே விதத்தில் ஜகத்தாகவும் ஜீவனாகவும் அவ்விரண்டுக்கும் ஆதாரமாக உள்ள பரவஸ்துவாகவும் இலங்குவது ஒன்றே. அந்த ஒன்றனுள் ஜகத், ஜீவன், பரம் என்னும் வேற்றுமை காண்பது அஞ்ஞானம்; ஒற்றுமை காண்பது ஞானம். ஜகத்துக்கும் ஜீவனுக்கும் தோற்றமும் ஒடுக்கமும் உண்டு. ஆதலால் அவையிரண்டும் முக்கிய வஸ்துக்கள் ஆகமாட்டா. அவையிரண்டுக்கும் முதல் காரணமாயிருக்கும் பரவஸ்துவோ யாண்டும் இருந்தது இருந்தபடியே இருக்கிறது. அப்பரமனுடைய காட்சியே மெய்க்காட்சி. ஜகத்தும் ஜீவனும் பொய்க்காட்சிகள். பொய்க்காட்சியை நீக்கி மெய்க்காட்சியில் நிலைத்திருப்பதுதான் வாழ்க்கையின் குறிக்கோள் என்பது இக்கண்ணியின் உட்கருத்தாம்.

**9-10. அருஉருவம் எல்லாம் அகன்று அதுவாய் ஆன பொருள்எமக்கு வந்து புலப்படுவது [எந்நாளோ.**

'உலகனைத்தும் ஆனாய் நீயே' என்பது ஆப்த வாக்கியம். பஞ்சபூதங்களாக இலங்குவது உலகம். இந்த உலகத்தின்கண் உருவமாகிய நீரும் நிலமும், அருவுருவாகிய அக்னியும், அருவாகிய காற்றும் ஆகாசமும் இலங்கிக் கொண்டிருக்கின்றன. இத்தனையுமாய் இவற்றுக்கப்பால் இருப்பது பரவஸ்து. பஞ்சபூதமாயிருக்கும் பிரகிருதிக்குப் போக்கும், வரவும், புணர்வும் உண்டு. அத்தகைய பிரகிருதிக்கு ஆதாரமாயிருக்கும் பரவஸ்துவோ யாண்டும் தன்மயமானது. அதுவே ஜீவனுடைய நிஜநிலை. அதை அடைதற்கு மேல் அந்த ஜீவனுக்கு வேறு ஒன்றும் இல்லை என்பதே இக்கண்ணியின் உட்பொருள்.

**9-11. ஆரணமும் காணு அகண்டிதா காரபரி பூரணம்வந்து எம்மைப் பொருந்துநாள் எந்நாளோ.**

ஆரணம் — வேதம்.

வேதமும் வேதநாயகனாகிய சிருஷ்டி கர்த்தாவும் பிரபஞ்சமும் இயற்கையும் ஒன்றும் மாறி அமையும் பாங்குடையது இப்பிரபஞ்சம். ஆதலால் இது மாயாகாரியம் எனக் கூறப்படுகிறது. அநித்தியமாய் உள்ள இப்பிரபஞ்சத்தை முறையாகக் கையாண்டால் ஜீவாத்மன் நித்திய வஸ்துவாகிய பரம்பொருளை அடையத் தகுதி உடையவனாகிறான். நிலைபேறில்லாத பிரகிருதியில் பிரயோஜனம் ஒன்று உண்டு. வீடுகட்டுவதைஅதற்குச்சான்றாகஎடுத்துக்கொள்ளலாம். வீடு கட்டுவதற்குச் சாரம்போடுவது அவசியம். சாரம் போடாவிட்டால் வீடுகட்ட இயலாது. வீடுகட்டிய பின் சாரத்துக்கு அவசியமில்லை. அதை நீக்கியே ஆகவேண்டும். பிரகிருதியின் துணைகொண்டு பூரணமாய், நித்தியமாய் உள்ள பரவஸ்துவை அறியவும், அடையவும் ஜீவாத்மன் முயலுகிறான். அவனுக்கு வீடுபேறாயிருப்பது இந்த அகண்ட வஸ்து. அத்தகைய வீட்டைக் கட்டி முடிப்பதற்கு அல்லது அடைதற்கு உபாயமாயிருப்பவை பிரகிருதியின் கூறுகளாகிய உடலும் உள்ளமுமாம். அவைகளை முறையாகப் பயன்படுத்தினால் பூரணமாய் உள்ள பரவஸ்துவை அடைவது ஜீவனுக்குச் சாத்தியமாகிறது. பிரகிருதியை முறையாகப் பயன்படுத்துவது யோகம் எனப்படும். பக்தியோகம், கர்மயோகம், ராஜயோகம், ஞானயோகம் என்னும் நான்கு யோகங்களும் பிரகிருதியை முறையாகப் பயன்படுத்துவதைப் புகட்டுகின்றன. யோகி பரத்தை அடைவதையே குறிக்கோளாகக் கொண்டிருக்கின்றான். ஆதலால் பரத்தை அடைதற்கு உபாயமாகிய வேதமயமாய் உள்ள பிரகிருதியை நன்கு பயன்படுத்திக்கொள்ளுதல் முற்றிலும் அவசியம் என்பதே இக்கண்ணியின் உட்பொருள்.

# சரியான விழிப்புணர்ச்சி தேவை

( சுவாமி விவேகானந்தர் )

திக்கற்றவர்களும், ஏழை எளியவர்களும், பாமரர்களும், விவசாயிகளும், தொழிலாளர்களும் முன்னேறுவதற்கு வழிவகுப்பதுதான் நம்முடைய வேலைத்திட்டமாகும். அவர்களுக்கு வேண்டியதைச் செய்தபின் அவகாசமிருந்தால் மற்றவர்களுக்குப் பணிசெய்வோம். அன்பைக் கொண்டு விவசாயிகளையும் தொழிலாளர்களையும் வசப்படுத்தவேண்டும். தன்னைத்தானே உயர்த்திக்கொள்ள வேண்டும் என்பது கீதா போதனை. இப்போதனை எல்லாத்துறைகளுக்கும் பொருந்தும். தங்களைத் தாங்களே உயர்த்திக்கொள்வதற்கு வழிகாட்டித்தர வேண்டும். தங்கள் உண்மையான நிலையை உணர்ந்து அந்நிலையிலிருந்து முன்னேறியே ஆகவேண்டும் என்பதில் ஆர்வம் கொண்டிருக்கின்ற சிரத்தை வடிவமாயிருப்பவர்களுக்குச் செய்கின்ற தொண்டு உண்மையான தொண்டாகும். முன்னேறவேண்டுமென்னும் ஆர்வத்தை ஊட்டுவதே அவர்களுக்கு நாம்செய்யும் உதவியாகும். முன்னேறவேண்டுமென்னும் ஆர்வம்எழுந்துவிடுமானல் அவர்களுக்குச் சரியான வழி காட்டப்பட்டதாகிறது. விவசாயிகளும் தொழிலாளர்களும் உயிரற்ற வாழ்க்கை வாழ்ந்து வருகிறார்கள். அவர்களை வலிமை உடையவர்களாகச் செய்து அவர்களுக்கு உயிர்ச்சக்தி ஊட்டுவதே பணம் படைத்தவர்கள் அவர்களுக்குச் செய்யும் உதவியாகும். அவர்களை ஒழுங்குபடுத்தி வலிவுடையவர்களாகச் செய்துவிட்டால் தங்களுக்குரிய பிரச்னைகளைத் தாங்களே தீர்த்துக்கொள்வார்கள். தங்களுக்கு நன்மை எது என்பதைத் தாங்களே அறிந்துகொள்வார்கள். தங்களுக்குத் தேவையானவற்றைத் தாங்களே தேடிக் கொள்வார்கள்.

சமுதாயத்திலுள்ள பிரச்னைகளைத் தீர்ப்பதற்குச் சரியான உறுதியான திட்டம் எது என்பதைப் பொது மக்கள் அறிந்துகொள்வதற்கு நீண்ட காலம் எடுத்துக்கொள்ளும். அக்காலம் வரும் வரையில் நாம் காத்திருக்கவேண்டும். சீர்திருத்தம் வேண்டுமென்று விரும்புபவர்கள் யார் இருக்கிறார்கள்? சீர்திருத்தம் வேண்டுமென்று விரும்புபவர்களை உருவாக்குங்கள். சிறுபான்மையோருடைய கொடுமையை நாம் பார்த்துக்கொண்டிருக்கிறோம். ஒரு சிலர் சிலவற்றைக் கெடுதல் என்று நினைக்கிறார்கள். அப்படி அவர்கள் நினைப்பதை நடைமுறைக்குக் கொண்டுவருவதால் சமுதாயம் வளர்ச்சி அடையாது. மக்களுக்கு நல்ல கல்வியை முதலில் தரவேண்டும். அப்படி நல்ல கல்வியைப் பெற்ற மக்களைக்கொண்டு சட்டசபை அமைக்க வேண்டும். அப்பொழுதுதான் முறையான சட்டதிட்டங்கள் உருவாகும். வலுவுடைய, விழிப்புடைய சமுதாயத்தை உருவாக்குங்கள். அப்பொழுது சமுதாய நன்மைக்கான நியதிகள் உருவாகும். பண்டைக்கால மன்னர்கள் மறைந்து போய்விட்டார்கள். இப்பொழுது பொது மக்களிடத்தில்தான் சக்தி இருக்கிறது. எனவே பொது மக்களிடத்தில் நல்ல முறையில் விழிப்புணர்ச்சியை உண்டாக்கவேண்டும். சமுதாயத்தில் சீர்திருத்தம் ஏற்படுவதற்குப் பொதுமக்களுக்கு நல்ல கல்வியைத் தருவது முதல் வேலையாகும். பிறகு அது பயனளிக்கும் வரையில் பொறுத்திருக்க வேண்டும்.

செல்வத்தைக் கொண்டு நாட்டை முன்னேற்றி விட முடியாது. உலகம் முழுவதிலும் உள்ள செல்வத்தைக் கொண்டு இந்தியாவிலுள்ள ஒரு சிறு கிராமத்தைக்கூட முன்னேற்றமடையச் செய்ய முடியாது. தங்களுக்குத் தாங்களே உதவி செய்து கொள்ளவேண்டுமென்னும் விழிப்புணர்ச்சி மக்களிடையே எழாவிட்டால் அவர்களுக்கு நாம் உதவி செய்தவர்களாக மாட்டோம். நல்லறிவையும் பண்பாட்டையும் தரக்கூடிய கல்வியை மக்களுக்குத் தருவதே நம்முடைய முதல் வேலையாகும். அப்பொழுதுதான் அவர்கள் விழிப்புணர்ச்சி பெறுவார்கள். சரியான விழிப்புணர்ச்சி ஏற்பட்டுவிட்டால் நலம்தரும் செயல்கள் தீவிரமாக நடைபெறும். வெறிச் செயல்களுக்கு இடம் இருக்காது. ஆக்கச் செயல்கள் நிகழ்ந்து வரும். அழிவுச் செயல்கள் நிகழா. மக்களிடையே ஒற்றுமையும்,சகோதர உணர்வும் உண்டாகும்.

# ஸ்ரீ லலிதா வியாக்கியானம்-178

*977.* **दशमुद्रासमाराध्या** தசமுத்ராஸமாராத்யா—பத்து முத்திரைகளைக் கொண்டு ஆராதிக்கப்படுகிறவள் என்பது இந்த நாமத்தின் பொருள்.

முத்திரை என்பது கை விரல்களைக்கொண்டு தெரிவிக்கும் அறிகுறியாம். ஒவ்வொரு முத்திரையிலும் ஒரு கருத்து அமைந்திருக்கிறது. ஆகவே வாய்பேசாமல் கையின் மூலமாகச் செய்யும் சைகைகள் அனைத்தும் இயல்பாக அமைந்துள்ள முத்திரைகளாம். வாய் பேச இயலாத ஊமையர்கள் பெரும்பாலும் தங்கள் கருத்துக்களைக் கையினால் காட்டி சைகைகள் மூலமாகத் தெரிவிக்கிறார்கள். அத்தகைய கைகளைத் தக்கமுறையில் திருத்தி அமைப்பதன் வாயிலாக முத்திரைகள் வடிவெடுத்திருக்கின்றன. சாஸ்திர பூர்வமாக இந்தப் பத்து முத்திரைகளும் விளக்கப்பட்டிருக்கின்றன. ஆனால் அவை யாவற்றையும் தெரிந்துகொள்ள வேண்டும் என்னும் அவா ஆத்மசாதகனுக்குத் தேவையில்லை. வழிபடும்பொழுது அவனிடத்து உண்டாகின்ற உணர்ச்சியின் விளைவாகக் கைகள் அசைகின்றன அல்லது வடிவங்களை எடுக்கின்றன. அவையாவும் அந்தந்தச் சாதகனுடைய மனப்பான்மைக்கேற்ற பிரகாரம் இயல்பாக அமைந்துள்ள முத்திரைகளாம். பக்தன் ஒருவன் தான் பூணும் மனப்பான்மைக்கேற்ற பிரகாரம் முத்திரைகளை அமைத்துக்கொள்ளலாம். முத்திரைகள் அமைப்பதில் பிழை ஏற்பட்டால் அன்னை பராசக்தி சினந்துகொள்கிறாள். ஆகையால் தகுதி வாய்ந்தவர்களிடமிருந்து முத்திரைகளின் அமைப்பை அறிந்துகொண்ட பிறகே அவைகளை ஆராதனையில் பயன்படுத்தவேண்டும் என்று சிலர் எச்சரிக்கை பண்ணுகின்றனர். ஆனால் இத்தகைய எச்சரிக்கை ஆதரவற்றது. முத்திரைகளின் அமைப்பைவிடச் சாலச்சிறந்ததாயிருப்பது தூய மனப்பான்மை. ஆதலால் தூய மனப்பான்மையுடனும் சிரத்தையுடனும் செய்யப்படுகிற ஆராதனை எப்படியிருந்தாலும் அது அன்னை பராசக்திக்கு உகந்ததாம். சாதகர்கள் மனதில் வைக்கவேண்டிய முக்கியமான கோட்பாடு இதுவாம்.

*978.* **त्रिपुरश्रीवशंकरी** த்ரிபுராஸ்ரீ வசம்கரீ-திரிபுராஸ்ரீயைத் தன்வசப்படுத்தி வைத்திருப்பவள் என்பது இந்த நாமத்தின் பொருள்.

இப்பிரபஞ்சமே இயற்கையாய் அமைந்துள்ள ஸ்ரீ சக்கரமாம். இதன் உட்பொருளை விளக்குதற்குக் கணிதபூர்வமாக வரைந்து வைக்கப்பட்டிருக்கும் சக்கரத்தை ஸ்ரீ சக்கரம் என்று அழைப்பது ஐதிகம். இவைகளுக்கிடையில் உள்ள ஒற்றுமையை ஒரு நாட்டின் இயற்கை அமைப்பும் அதை விளக்குதற்கென்று அமைந்துள்ள தேசப்பட அமைப்பும் ஒன்றையொன்று ஒத்திருப்பது விளக்குகின்றது. தேசப்படத்தினும் சிறந்தது தேச அமைப்பு. அதே பாங்கில் அறிஞர்களால் வரையப்பட்டுள்ள ஸ்ரீ சக்கரத்தைவிட இயற்கையாய் அமைந்துள்ள ஸ்ரீ சக்கரமாகிய பிரபஞ்சம் உயர்ந்ததாம். இப்பிரபஞ்சத்தின் நடைமுறையில் அந்தந்தச் செயலுக்கேற்ற அதிஷ்டான தேவதைகள் பலர் இருக்கின்றனர். இயற்கையின் நடைமுறையை முற்றிலும் அனுசரிப்பதே ஸ்ரீ சக்கர வழிபாடாம். அதற்கு நேர்மாறாக வரைந்த படத்தை அலங்கரித்து வைத்துக்கொண்டு விதவிதமான உபகரணங்களுடன் வழிபாடு செய்வது அன்னையின் ஆராதனையாகாது. போதாததற்குப் பத்து முத்திரைகளை முறையாகக் காட்டி ஆராதனை செய்யாவிட்டால் பராசக்தி சினந்துகொள்வாள் என்னும் கொள்கை பொருளற்றது. இந்தப் பாங்கில் மக்களுக்கிடையில் பொருந்தாத நம்பிக்கைகளை ஊட்டுவது முறையாகாது.

பொது நலனுக்காகவென்று துவக்கப்பெற்றுள்ள ஏதேனும் ஓர் இயக்கத்தில் தொண்டர்கள் ஊக்கத்துடன் ஈடுபடுவார்களாகில் அன்னவர்களுக்குப் படித்தரத்தில் உதவி பண்ணுதற்குப் பிரமுகர்கள் யாராரோ தெய்வாதீனமாக வந்து வாய்க்கின்றனர். அப்படி அடையும் தெய்வாதீன உதவியே திரிபுராஸ்ரீ என்று உருவகப்படுத்தி ஈண்டு இயம்பப் பெற்றுள்ளது. எனவே சுருங்கச்சொல்லின் அன்னை பராசக்தியோடு தூய இணக்கம் வைத்துத் தீவிரமாக லோக ஹிதத்துக்காக

என்று செய்யப்படும் கர்மங்கள் அனைத்தும் ஸ்ரீ சக்கரத்தின்மூலம் செய்யப்படுகிற வழிபாடாகும்.

**979. ज्ञानमुद्रा ஞானமுத்ரா**—ஞானத்தால் அடையப்படுகிறவள் என்பது இந்த நாமத்தின் பொருள்.

பூமியினுள் இன்ன இடத்தில் தங்கம் இருக்கிறது என்பதை அறிந்துகொள்கிறவனுக்கு அந்த அறிவே ஆங்குள்ள தங்கத்தை அறிதற்கு நிகராகிறது. Knowledge is Powerஎன்பது கோட்பாடு. இன்றைக்கு முன்னேற்றம் அடைந்துள்ள பௌதிக விஞ்ஞானம் இதற்குச் சான்றாக வந்தமைகிறது. பிரபஞ்சத்திலுள்ள பொருள்களின் பாங்குகளை அறிய அறிய மனிதன் வல்லமை மிக வாய்க்கப் பெற்றவனாகிறான். இன்றிருந்து நாளை அழிந்துபட்டுப் போகும் பிரபஞ்சத்தைப்பற்றிய உண்மைகளை அறிந்துகொள்ளுதற்கேற்ப மனிதனுக்கு வல்லமை வளர்கிறது என்றால் இனி அழியாப் பொருளாகிய பரத்தைப் பற்றிய ஞானம் எத்தகைய வல்லமையை மனிதனுக்குக் கொடுத்துதவமாட்டாது! பிரம்மத்தை அறிகிறவன் பிரம்மமாகிறான். (பிரம்மவித் பிரம்மைவ பவதி என்பது மறைமொழி)

இகத்தைப் பற்றியும் பரத்தைப் பற்றியும் ஞானம் ஓங்குதற்கேற்ப ஆத்ம சாதகன் பரதேவதையை நன்கு வழிபடுகிறான். ஞான முத்திரை என்னும் சொல்லைச் சின் முத்திரை என்றும் சொல்கிறோம். அதற்கேற்ற விரல்களின் சைகைகள் ஐதிகமாக வந்தமைந்திருக்கின்றன. அத்தகைய சின் முத்திரையை வலக்கையில் தாங்கியவராக உலகக் குருவாகிய சிவனார் தாம் எடுத்துள்ள தட்சிணாமூர்த்தி வடிவத்தில் காட்டியருள்கின்றார். வலக்கையில் உள்ள கட்டைவிரல் நுனியும் ஆள் காட்டி விரல் நுனியும் ஒன்றோடொன்று ஒட்டியிருக்கின்றன. ஏனைய மூன்று விரல்களும் விரிந்து நிற்கின்றன. இத்தகைய விரல் அமைப்பே சின் முத்திரை என்னும் பெயர் பெறுகிறது. இதில் கருத்து மிகப் புதைந்திருக்கிறது. கட்டைவிரல் பரவஸ்துவுக்குச் சின்னமாகிறது. ஆள்காட்டி விரல் ஜீவாத்மனுக்குச் சின்னமாக அமைந்திருக்கிறது. ஜீவாத்மனோ தன்னுடைய சாதாரணமான உலக வாழ்க்கையில் பிரபஞ்சத்தில் கட்டுண்டவனாக இருக்கிறான். பிரபஞ்சத்துக்கு முப்பாழ் என்பது ஐதிகமாக வந்துள்ள விளக்கமாம். காலம், தேசம், நிமித்தம் ஆகிய மூன்றும் மனோகல்பிதத்தால் வந்திருப்பதால் மனம் போன இடத்தில் அம்மூன்றும் மறைந்துபட்டுப் போகின்றன. ஆதலால் அவைகளைப் பாழ் என்று பகர்வது பொருந்தும். அம்மூன்றும் மேலும் மூன்று குணங்களுக்குச் சின்னமாக அமைந்திருக்கின்றன. சத்துவம், ரஜஸ், தமஸ் ஆகிய முக்குண மயமாகப் பிரபஞ்சம் அமைந்திருக்கிறது. இந்த மூன்று குணங்களின் பாகுபாட்டால் பிரபஞ்சம் தோன்றிக்கொண்டிருக்கிறது. இம்மூன்று குணங்களும் ஒன்றுபட்டு ஐக்கிய நிலையை எய்துங்கால் பிரபஞ்சம் மறைந்துபட்டுப் போகிறது. இக்காரணத்தை முன்னிட்டும் மூன்று குணங்களை முப்பாழ் எனப் பகர்வது பொருந்தும். ஜீவர்கள் வாழ்ந்திருக்கும் காலமெல்லாம் அவர்கள் மூன்று அவஸ்தைகளில் இருந்துகொண்டு தங்களுடைய உலக வியவகாரங்களைச் செய்துவருகின்றனர். ஜாக்ரதம், சொப்பனம், சுஷுப்தி எனவும் நனவு, கனவு, கனவற்ற உறக்கம் எனவும் இந்த மூன்று அவஸ்தைகள் பெயர் பெற்றுள்ளன. எந்த வஸ்து ஒரு காலத்தில் ஒரு காரணத்தை முன்னிட்டு ஓரிடத்தில் இருக்கின்றதோ அதே வஸ்து வேறொரு காலத்தில் வேறு ஒரு காரணத்தை முன்னிட்டு இருந்த இடத்தில் இல்லாது மறைந்துபட்டுப் போகிறது. இதற்குச் சான்றாகச் சொப்பனாவஸ்தையை எடுத்துக்கொள்ளலாம். தூக்கத்தில் ஏழை ஒருவன் ராஜா ஆனதாகக் கனவு காண்கிறான். அந்நிலையில் அவன் பரமானந்தத்தில் சொக்கி இருக்கிறான். அப்படியிருந்தும் அவன் ராஜா அல்லன் என்பதை எல்லாரும் ஒத்துக்கொள்கின்றனர். எல்லாரும் ஒத்துக்கொள்ளாவிட்டாலும் அதே கோட்பாடுதான் நனவிற்கும், சுழுத்தி அல்லது கனவற்ற உறக்கத்துக்கும் பொருந்துகிறது. ஆகவே மூன்று அவஸ்தைகளில் வாழ்ந்து வருகின்ற உயிர்வகைகள் உண்மையில் முப்பாழில் வாழ்ந்து வருகின்றார்கள். முப்பாழ்களில் வாழ்ந்திருப்பதும் வாழாது ஒழிந்துபட்டுப் போவதும் ஒன்றேயாம்.

ஆக, இம்மும்மை மயமாக இப்பிரபஞ்சம் இருக்கிறது. இதைப்பற்றி மற்றோர் உண்மை உள்ளது. இப்பிரபஞ்சத்தில் இன்பம் காண உயிர்வகைகள் அனைத்தும் முயன்று வருகின்றன. எத்தனை எத்தனையோ ஜன்மங்கள் எடுத்து இப்பிரபஞ்சத்தை அனுபவித்துப் பார்த்தான பிறகு இதில் உள்ள மற்றோர் உண்மை விவேகிக்கு விளங்குகிறது. அதாவது துன்பம் கலவாத இன்பம் இப்பிரபஞ்சத்தில் இல்லை. துன்பம் என்னும் விலைகொடுத்தே இன்பத்தை ஒவ்வொரு ஜீவனும் பெறுகிறான். பெரும்பாலும் கொடுக்கிற விலை மிகப்பெரியது. இன்பம் என்னும் வாங்கப்படுகிற பொருள் மிகச் சிறியது அல்லது நிலையற்றது. இவ்வுண்மையை அறிந்தான பிறகு ஜீவாத்மன் மும்மை மயமாயிருக்கும் பிரபஞ்சத்தினின்று தன்னைப் பிரித்தெடுத்துக்கொண்டு பரம்பொருளிடத்துத் தன்னுடைய நாட்டத்தைச் செலுத்துகிறான். இக்கோட்பாட்டுக்கு விளக்கமாகச் சின்முத்திரை அமைந்திருக்கிறது.

இனி, சமயச் சார்புடையவர்கள் இச் சின்முத்திரைக்குத் தங்கள் சம்பிரதாயப்படி ஒரு வியாக்கியானம் தருகிறார்கள். அதன்படி உலகத்தோடு ஒட்டி வாழ்கின்ற ஜீவாத்மன் மூன்றுவித மலங்களில் உழல்கின்றான். அவை யாவன: மாயை, கன்மம், அகங்காரம். இவைகளினின்று ஜீவாத்மன் தன்னைப் பிரித்தெடுத்துக்கொள்ளக் கடமைப்பட்டிருக்கின்றான். அடுத்தபடியாக அந்த ஜீவாத்மன் பரத்தைச் சாரப் பெரு முயற்சி எடுத்துக்கொள்ள வேண்டும். அம்முயற்சியே கர்மயோகம் என்றும் ராஜயோகம் என்றும் பக்தியோகம் என்றும் ஞானயோகம் என்றும் பெயர் பெறுகிறது. இத்தகைய வியாக்கியானம் பொருத்தமானதே. இதன் வாயிலாக ஜீவாத்மன் பரமாத்மனோடு ஒன்றுபடுகிறான்.

**980. ज्ञानगम्या ஞானகம்யா—ஞானத்தினால் அடையப்படுபவள் என்பது இந்த நாமத்தின் பொருள்.**

மனிதன் அடைகிற பேறுகளுள் ஞானத்துக்கு நிகரானது வேறு ஏதும் இல்லை. ஞானம் ஓங்குதற்கேற்ப ஜீவாத்மன் ஜீவபோதத்தைத் துடைக்கவும் பரபோதத்தை வளர்க்கவும் வல்லவனாகிறான். இதற்குச் சான்று ஒன்று எடுத்துக்கொள்வோம். தூங்குகிற மனிதன் ஒருவன் தன்னைத் துன்புறுத்துகிற கனவு ஒன்றுக்கு ஆளாகிறான். அப்படி அவன் வருந்திக்கொண்டிருக்கிற நிலையில் வைத்து அவனுடைய துயரத்தை நீக்க முயலுவது வீண் முயற்சியாம். அதற்கு நேர்மாறாக அவன் கண்டுகொண்டிருக்கின்ற கனவு நிலையினின்று நனவு நிலைக்கு அவனைத் தட்டி எழுப்பவேண்டும். அப்படி எழுந்து தெளிவடைந்த பிறகே தான் துயரப்பட்டது வெறும் கனவு என அவன் அதைத் துடைக்க வல்லவனாகிறான். அம்மனிதனுக்கு நனவு நிலை ஞான நிலையாகிறது. கனவுநிலையோ அஞ்ஞானமாகிறது. அஞ்ஞானத்தில் அவன்பட்ட துயரத்தைத் துடைத்துத் தள்ளுதற்கு ஞானம் ஒன்றே உற்ற உபாயமாம். இதற்கு ஒப்ப இப்பிரபஞ்ச வாழ்வென்பது நீண்டதொரு கனவு. பரம்பொருளைச் சார்ந்திருந்து பரபோதத்தைப் பெறுவதே மனிதனுக்கு உற்ற நிஜநிலையாம். அது ஞானத்தின் விளைவு. பிரபஞ்ச வாழ்வு என்னும் நீண்ட கனவு அஞ்ஞானத்தின் விளைவு. ஜீவாத்மன் ஒருவன் கணக்கற்ற பிறவிகளில் பிரபஞ்சத்தைச் சார்ந்திருக்கின்றான். பிரபஞ்சமோ அஞ்ஞானத்தின் தோற்றம். அங்ஙனம் அஞ்ஞானத்தில் இருந்துகொண்டு பரம்பொருளை வழிபடுவதாகக் கனவு காண்பதும் ஒருவித அஞ்ஞானமாகும். பரம்பொருளை அனுபூதியில் அறிந்துகொள்ளுதல் பரஞானம். அத்தகைய ஞானத்தின் மூலமாகவே பரதேவதையாகிய அம்பிகை உண்மையாக அடையப்பெறுகிறாள். பிரபஞ்ச வாழ்வில் பற்றுவைத்துக்கொண்டு பரம்பொருளை வழிபடுவதெல்லாம் சிறு பிள்ளைகளின் விளையாட்டுக்குச் சமானமாகிறது. சிறு குழந்தைகள் மணல்வீடு கட்டி மணலில் சோறு சமைத்து அதை வந்தவர்களுக்குப் படைத்து விளையாடுகின்றனர். அதே பாங்கில் பிரபஞ்சத்தில் பற்றுவைத்துக்கொண்டு பரம்பொருளை வழிபடுவதாக மக்கள் நினைத்துக்கொள்கின்றனர். நினைவளவில் அது சரி. ஆனால் பிரபஞ்சத்தினின்று வருகின்ற துன்பங்களைத் துடைப்பதற்கு அது உதவாது. உண்மையாகப் பரபோதம் பெற்று எழுந்திருப்பதே ஞானம். அத்தகைய ஞானத்தின் மூலமாகச் செய்கிற வழிபாடே பொருத்தமான வழிபாடாம்.

# ஸத் ஸம்பாஷணை

கேள்வி : (355) நண்பர்களுடைய கஷ்டத்தையோ நோயையோ போக்குவதற்காக, அவர்கள்மீதுள்ள அன்பினுல் சுயநலமின்றிப் பிரார்த்தனை பண்ணுவது காமியப் பிரார்த்தனையோடு சேருமா? பரமஹம்சதேவர் தாமே கேசவரின் நோய் நீங்கவேண்டும் என்று இளநீரும் சர்க்கரையும் படைப்பதாகக் காளியிடம் வேண்டிக்கொள்கிருரே? இது அவர் நமக்குக் காட்டித் தந்த பாடம்தானே? நாமும் ஏன் அப்படிச் செய்யக்கூடாது?

பரமஹம்சதேவர் செய்ததும் ஒருவிதமான காமியப் பிரார்த்தனையேயாம். ஆனல் அவர் அதைத் தம்முடைய உற்ருர் உறவினரை முன்விட்டுச் செய்யவில்லை. பரம்பொருளிடத்துப் பக்தி பூண்டிருந்த ஒருவரைக் குறித்துச் செய்தார். 'கேசவசந்திரசேனர் மறைந்துபட்டுப் போனல் பாரமார்த்திகப் பெரிய விஷயங்களைப்பற்றிப் பின்பு நான் யாருடன் பேசுவேன் என்ற கவலை அப்படிப் பிரார்த்தனைபண்ண என்னைத் தூண்டியது' என்று அவர் செயலுக்கு அவரே விளக்கம் கொடுத்திருக்கின்ருர். அத்தகைய பிரார்த்தனையை நம் நண்பர்கள் பொருட்டு நாம் செய்யலாகாது எனத் தடுப்பது முறையன்று. ஆயினும் பக்தியிலும் ஞானத்திலும் முதிர்ந்து மேலே போகப் போக அத்தகைய பிரார்த்தனைகள் தாமாக நின்றுவிடுகின்றன. இந்தச் சரீர வாழ்க்கையை வைத்துக்கொண்டு 'இறைவா, நீ நன்றே செய்வாய் பிழை செய்வாய் நானே இதற்கு நாயகமே' என்னும் அதீதநிலை தானுக வந்தமைகிறது. பிரபஞ்ச சம்பந்தமான கவலைகளனைத்தையும் கடந்தவர்கள் செயல் அத்தகையதாம்.

கேள்வி: (356) நம் மனதில் தீய எண்ணங்கள் எழும்போது அவற்றிடம் எப்படி உதாசீனமாக இருப்பது? விவேகத்தால் விசாரம் செய்து நீக்கமுடியுமா? 'யோக: சித்தவிருத்தி நிரோத:' என்பது இதுதானு?

ஒரு மனிதனேடு நாம் உறவாடுகிருேம். பிறகு அவனுடைய போக்கு நமக்குப் பிடிக்காவிட்டால் அவன் நம்மிடம் வரும்பொழுது உதாசீனமாய் இருப்பது கண்ணியமான முறை. 'என்னிடம் வரவேண்டாம் போ' என்று பகர்வது இரண்டாம் தரமான முறை. தீமையைக் களையும் விஷயத்திலும் தலைத் தரமான முறையைக் கையாளுவது உசிதம். பொருந்திய எண்ணங்கள் ஆழ்ந்து உள்ளத்தில் இடம் பெற்றிருக்கிறபொழுது பொருந்தாத எண்ணங்கள் தலையெடுக்கமாட்டா. ஒரு வேளை இடையிடையே அவைகள் தோன்றினல் அவைகளிடத்து உதாசீனமாய் இருப்பதே சாலச்சிறந்த உபாயமாம். இத்தகைய பொருந்தாத எண்ணங்கள் தோன்றிவிட்டனவே என்று வியாகுலப்படுகின்ற பொழுது அந்த எண்ணங்களினுடைய உள்வலிவை நாம் மேலும் வளர்க்கிருேம். பொருந்தாத சித்தவிருத்திகளிடத்து உதாசீனமாய் இருப்பது அவற்றை விரட்டியோட்டுதற்குச் சாலச்சிறந்த உபாயமாம். 'யோக: சித்தவிருத்தி நிரோத:' என்னும் கோட்பாட்டில் இது இடம் பெறுகிறது.

கேள்வி : (357) பீஷ்மரை நாம் ஏன் கிருஷ்ணனுக்குச் சமமாகக் கூறக்கூடாது?

பீஷ்மரைக் கிருஷ்ணனுக்குச் சமனுகக் கூறுவதில் தோஷம் ஏதும் இல்லை. பின்பு, சாதாரண ஒரு ஜீவனுகப் பிறந்து பண்பாட்டில் மேலே வந்தவர் பீஷ்மர். ஸ்ரீ கிருஷ்ணனே பிறந்தது முதற்கொண்டு சரீரத்தை உகுக்கும் வரையில் நிறைநிலையிலேயே இருந்த அவதார மூர்த்தி. அத்தகைய மூர்த்தியைப் பீஷ்மர் தாமே உபாசித்தார். ஆனல் பீஷ்மரை உபாசிக்க வேண்டிய அவசியம் ஸ்ரீ கிருஷ்ணனுக்கு வரவில்லை.

கேள்வி: (358) இராமன், பரசுராமன் இரண்டு அவதாரங்களிடையே ஏன் முரண்பாடு வந்தது?

தசாவதாரங்கள் சரித்திரபூர்வமான மூர்த்திகள் அல்லர். பத்து அவதாரங்களுள் தசரத ராமன், கிருஷ்ண பரமாத்மா, புத்தர்பெம்மான் ஆகிய மூவருமே சரித்திர பூர்வமான மூர்த்திகளாவார்கள். ஏனையவர்கள் புராணக் கற்பனை மூர்த்திகளாம். ஆயினும் அந்தக் கற்பனைமூர்த்திகள்போன்றவர்களை எக்காலத்திலும் பிரபஞ்சத்தில் காணலாம். இந்தக் கோட்பாட்டுக்குட்பட தசரத ராமனைப் பரசுராமன் வந்து தாக்கி

ணர் என்பதும் சரித்திர பூர்வமான நிகழ்ச்சி ஆகாது. ஆயினும் கற்பனையாக அமைந்த அந்தச் சூழ்நிலையில் நல்ல ஆத்ம சாதகன் ஒருவன் எப்படி நடந்து கொள்ளவேண்டும் என்பதற்குக் கற்பனையாக நிகழ்ந்த பரசுராம-தசரத ராம முரண்பாடு விளக்குகிறது. இராமாயணத்தில் நிகழ்ந்த நிகழ்ச்சிகளில் சில புராண பூர்வமான கற்பனைகள் என்பதை நாம் ஞாபகத்தில் வைத்துக்கொள்ள வேண்டும். கற்பனை எனினும் அதன் நடைமுறை நமக்குப் பாடம் புகட்டுகிறது. அதன் பொருட்டு அக் கற்பனை நிகழ்ச்சிகளையும் சரித்திர பூர்வமான நிகழ்ச்சிகளோடு இணைத்து எடுத்துக்கொள்வதில் குற்றம் ஏதும் இல்லை. சமுதாயத்துக்கு நல்வழி காட்டுதற்கு அவைகள் நன்கு பயன்படுகின்றன என்பதை ஞாபகத்தில் வைத்துக் கொள்ள வேண்டும்.

கேள்வி : (359) ஆதிபராசக்தி, ஸ்ரீ வேங்கடேஸ்வரர் முதலிய தேவதைகள் ஒரு சாதாரண மனிதர் மேல் ஆவிர்பவித்துக் குறித்த நாளில் குறித்த நேரத்தில் அருள்வாக்குச் சொல்கிறார்கள். பல நோய்களுக்கு மருந்து கூறித் தீராத நோய் தீர்க்கப்படுகிறது. சமுதாயத்தில் பலருக்கிடையில் இத்தகைய செய்திகளும், நம்பிக்கைகளும் நிகழ்ந்து வருகின்றன. இதைப் பற்றித் தர்ம சக்கரத்தின் கருத்து என்ன?

இத்தகைய நம்பிக்கைகளும், செயல்களும் உலகில் எங்குமே சமுதாயத்தில் இடையிடையே நிகழ்ந்து வருகின்றன என்பது வெளிப்படை. அசாதாரணமான மனோசக்தி சிலருக்கிடையில் திடீரென்று தோற்றத்துக்கு வருகிறது. Freaks of Nature என்னும் கோட்பாட்டில் இது அடங்குகிறது. சிலவேளைகளில் நோயைச் சிகிச்சை செய்யும் முறைகள் வெற்றிகரமாக நிகழ்கின்றன. வேறு சில வேளைகளில் பொருளற்ற கூற்றுக்களாகவும் அவைகள் முடிவுறுகின்றன. மழை குறிப்பிட்ட ஓரிடத்தில் எப்பொழுது எவ்வளவு பெய்யும் என்று கேட்டால் சரியான விடை சொல்ல அந்தத் தேவதைக்கு இயலவில்லை. எனவே எந்தத் தேவதைக்கும் குறிப்பிட்ட ஒரு மனிதனைப் பிடித்துள்ள இந்த மன நோய்க்கும் சம்பந்தம் இல்லை என்பது வெளியாகிறது. இயற்கையில் புயற்காற்று, மழை ஆகியவைகளைப்பற்றி வானசாஸ்திர ஆராய்ச்சி நிலையங்கள் வெளியிடுகின்றன. அவைகளை நம்பலாம். ஆனால் பொதுமக்கள் இந்த வேஷதாரிகளை நம்பி ஏமாற்றமடையலாகாது.

கேள்வி : (360) கணவனே தெய்வம் என்று நம்பியிருந்த பெண்ணிற்குக் கணவன் துரோகம் செய்து விட்டார். அவள் சாவதைத் தவிர வேறு வழியில்லையா? பெண்களுக்கு மட்டும் தான் கற்பு நெறியா? இனி, பிறவியே வேண்டாம் என நினைக்கிறேன். இதற்கு என்ன வழி?

கற்பு ஆடவர், மகளிர் ஆகிய இருதரத்தாருக்கும் பொதுவானதே. ஆடவன் ஒருவன் முதல் மனைவிக்குச் சந்தானம் வாய்க்காவிட்டால் அதை நாடி இரண்டாவது மணம்புரிந்து கொள்ளலாம். அதற்கும் முதல் மனைவியின் சம்மதத்தைப் பெறுவது முற்றிலும் அவசியம். இனி, ஆடவன் ஒருவனுக்குக் குடும்பியாயிருக்கும்பொழுது திடீரென்று உலகப்பற்றினின்று விழித்தெழுந்து விவேகம், வைராக்கியம் வந்துவிட்டால் அவன் துறவியாகப் போகலாம் என்னும் ஆமோதிப்புச் சான்றோர்களுக்கிடையில் உண்டு. ஆனல் பெண்பால் ஒருத்திக்குத் துறவறம் பூணும் சுதந்திரம் இதுகாறும் நம் சமுதாயத்தில் இல்லாதிருந்தது. ஆனல் ஸ்ரீராமகிருஷ்ண பரமஹம்சர் மண்ணுலகில் தோன்றி வந்த காலம் முதல் பெண்களுக்கும் துறவியாகப் போகும் சுதந்திரம் உண்டு என்னும் கொள்கை வந்துள்ளது. ஆனல் அங்ஙனம் துறவறம் பூணும் பெண்பாலர் தக்க ஸ்தாபனம் ஒன்றில் வாழ்ந்திருத்தல் வேண்டும். தனியாக அவர்கள் சஞ்சரிக்கலாகாது.

பாரமார்த்திகப் பெருநிலையை எய்தும் வாய்ப்பு ஆண்பாலருக்கு இருப்பதுபோன்று பெண்பாலருக்கும் சாத்தியம். பெண்களுக்கு ஞானம் கிடையாது என்னும் குருட்டு நம்பிக்கை நம்மவர்களுள் ஒரு சிலருக்கிடையில் இன்றைக்கும் இருந்து வருகிறது. இக் கொள்கை பொருளற்றது என்பதை ஸ்ரீசாரதா தேவியார் நிரூபித்துள்ளார். ஆதலால் பொறுப்பற்ற கணவனைப் புறக்கணித்துவிட்டு நெறி பிறழாத மாது ஒருத்தி துறவறம் பூண்டு ஒரு நல்ல ஸ்தாபனத்தின்மூலம் மக்கள் சேவை செய்வதே மானுட ஜன்மத்தின் குறிக்கோளாகும்.

# ஆத்ம போதம்

( திரு. V. S. நரசிம்மன் )

उपाधि विलयाद्विष्णौ निर्विशेषं विशेन्मुनिः ।
जले जलं वियद्व्योम्नि तेजस्तेजसि वा यथा ॥

उपाधि (உபாதி) உபாதிகள் विलयात् (விலயாத்) அழிந்த பின், यथा (யதா) எவ்வாறு, जले जलं (ஜலே ஜலம்) நீரில் நீர், वियत् व्योम्नि (வியத் வ்யோம்னி) ஆகாயத்தில் ஆகாயம், वा (வா) அல்லது तेजः तेजसि (தேஜ: தேஜஸி) நெருப்பில் நெருப்பு போல், निर्विशेषं (நிர்விசேஷம்) வேற்றுமைகள் அற்று विष्णौ (விஷ்ணௌ) பரம்பொருளில் मुनिः (முனி:) முனிவன் विशेत् (விசேத்) கலந்து விடுகின்றான்.

"தண்ணீரில் தண்ணீர், ஆகாயத்தில் ஆகாயம், நெருப்பில் நெருப்பு — எவ்வாறு வேற்றுமையின்றிக் கலக்கின்றனவோ, அது போன்று உபாதிகள் அழிந்தபின் முனிவன் பொருளுடன் கலந்து விடுகின்றான்."

உபாதிகளை அகற்றினால் ஜீவாத்மாவிற்கும் பரமாத்மாவிற்கும் வேறுபாடு சிறிதும் கிடையாது என்பதை 'நிர்விசேஷம்' என்னும் சொல் உணர்த்துகிறது. கொடுக்கப்பட்டுள்ள மூன்று உதாரணங்களும் இதைத் தெளிவுபடுத்துகின்றன. கங்கை நதியில் கையளவு நீரை எடுத்து அதில் அர்க்கியமாக விடுகின்றோம். கையில் வைத்திருந்த நீர் வேறுபடுத்த இயலாதபடி கங்கையுடன் ஒன்றுகின்றது. கடத்தில் உள்ள 'கடாகாசம்' கடத்தை உடைத்தவுடன் மஹாகாசத்துடன் கலந்து விடுகின்றது. (இறுதிச் சடங்கில் கடம் உடைப்பதன் தத்துவம் இது தான்) கொழுந்து விட்டெரியும் சுவாலையில் இருந்து தெறித்த நெருப்புப் பொறியை மறுபடியும் சுவாலையில் இட்டால், அதுவும் வேறுபாடு இன்றிக் கலக்கின்றது. ஜீவ-ப்ரஹ்ம ஐக்கியத்தை இவ்வளவு அழுத்தமாக, அழகாக வேதாந்தம் உரைக்கின்றது. கடோபநிஷத்: யதா உதகம் சுத்தே சுத்தமாஸிக்தம் தாத்ருக் பவதி (4-15); முண்டக உபநிஷத்: யதா நத்ய: ஸ்யந்தமானா: சமுத்ரே அஸ்தம் கச்சந்தி நாம ரூபே விஹாய—என்று இதே தத்துவத்தை விளக்குகின்றன.

"உபாதி விலயாத்—உபாதிகள் அழிந்த பின்" — இருவிதக் கருத்துக்கள் இங்குக் குறிப்பிடப்படுகின்றன. சரீரத்தில் வாழும்போதே, அதற்கு அப்பாற்பட்ட நிலையில் இருந்து, உடலைத் தனது உபாதி என்று நன்குணர்ந்த ஞானி ஜீவன் முக்தன் ஆவார். ஆத்ம ஞான எழுச்சியும் உபாதி கலப்பும் ஒன்றாக அமைகின்றன. சரீரத்தோடு இருப்பினும் ப்ராரப்த கர்மத்தை அனுபவிக்கின்றான் என்று நாம் கருதினாலும், உண்மை நிலையை அவர்தாம் அறிவார்.

இரண்டாவது கருத்து விதேஹ முக்தியாகும். ஞானத்தின் எல்லையை எட்டிய பிறகும் சரீரம், மனம், புத்தியோடு காணப்படுவதால் உபாதி முற்றிலும் அழிக்கப்படவில்லை. அந்த அறிகுறியும் சரீரம் உதிர்ந்தபின் போகின்றது. அப்போது இரண்டற்ற நிலையை அவர் அடைகின்றார். 'தஸ்ய தாவதேவ சிரம் யாவத் ந விமோக்ஷ்யே—அவனது பழைய வினைகளில் இருந்து விடுபடும்வரைதான் அவனுக்குத் தாமதம்' என்கிறது சாந்தோக்ய உபநிஷத்.

यल्लाभान्नापरो लाभो यत्सुखान्नापरं सुखम् ।
यज्ज्ञानान्नापरं ज्ञानं तद्ब्रह्मेत्यवधारयेत् ॥

यत् लाभात् (யத் லாபாத்) எதை அடைந்த பிறகு न अपरः लाभः (ந அபர: லாப:) வேறு உயர்ந்த பொருள் தேவையில்லையோ यत् सुखात् (யத் சுகாத்)எந்தச் சுகத்தைக் காட்டிலும் न अपरं सुखं (ந அபரம் சுகம்) வேறு உயர்ந்த சுகமில்லையோ यत् ज्ञानात् (யத் ஞானாத்) எந்த ஞானத்தைக்காட்டிலும் न अपरं ज्ञानं (ந அபரம் ஞானம்) வேறு உயர்ந்த ஞானமில்லையோ तत् (தத்) அதுவே ब्रह्म इति (ப்ரஹ்ம இதி) பரம்பொருள் என்று अवधारयेत् (அவதாரயேத்) தீர்மானித்துக் கொள்ள வேண்டும்.

"எதை அடைந்த பிறகு வேறு உயர்ந்த பொருள் ஒன்றும் இல்லையோ, எந்தச் சுகத்தைக் காட்டிலும் வேறு உயர்ந்த சுகம் இல்லையோ, எந்த ஞானத்தைக் காட்டிலும் வேறு உயர்ந்த ஞானம் இல்லையோ, அதுவே பரம் பொருள் என்பதை உறுதியாக அறிந்து கொள்ளவேண்டும்."

'ஆத்ம லாபாத் ந பரம் வித்யதே — ஆத்ம லாபத்திற்கு மேற்பட்டு எதுவும் கிடையாது.' யத் சௌக்ய அம்புதிலே சதே இமே சக்ரா தயோ தேவதா: - எந்தச் சுக சாகரத்தின் ஒரு துளியாக இந்திரன் போன்ற தேவதைகளின் சுகம் இருக்கின்றதோ என்பது மனீஷா பஞ்சகம். 'ஏஷா அஸ்ய பரமா கதி: ஏஷா அஸ்ய பரமா ஸம்பத் ஏஷோ அஸ்ய பரமோ லோக: ஏஷோ அஸ்ய பரம ஆனந்த ஏதஸ்யைவ ஆனந்தஸ்ய அந்யானி பூதானி மாத்ராம் உபஜீவந்தி—இதுவே பெரிய லட்சியம், உயர்ந்த செல்வம், மேலான லோகம், சிறந்த ஆனந்தம்; இதில் ஒரு சிறு பகுதியைத் தான் உயிர்கள் ஆனந்தமென அனுபவிக்கின்றன—பிருஹத் ஆரண்யக உப நிஷத். 'ஸா காஷ்டா ஸா பர கதி:' என்பது கடோபநிஷத் வாக்கியம். 'ப்ரஹ்ம வித் ப்ரஹ்மைவ பவதி—பிரம்மத்தை அறிந்தவன் பிரம்மம் ஆகின்ருன்' என்னும் உபதேசத்திற்கு ஏற்பச் சச்சித்தானந்த சொருபமாகத் திகழ் வதே பெரிய லாபம், சுகம், ஞானம் என்று இந்தச் சுலோகம் குறிப்பிடுகின்றது.

यत् दृष्ट्वा नापरं दृश्यं यद्भूत्वा न पुनर्भवः ।
यज्ज्ञात्वा नापरं ज्ञेयं तत् ब्रह्मेत्यवधारयेत् ॥

यत् दृष्ट्वा (யத் த்ருஷ்ட்வா) எதைப் பார்த்த பிறகு न अपरं दृश्यं (ந அபரம் த்ருஷ்யம்) பார்க்க வேண்டிய வேறு ஒன்று இல்லையோ, यत् भूत्वा (யத் பூத்வா) எதுவாக மாறிய பின் न पुनः भव (ந புன: பவ:) பிறப்பு மறுபடியும் இல்லையோ यत् ज्ञात्वा (யத் ஞாத்வா) எதை அறிந்த பிறகு न अपरं ज्ञेयं (ந அபரம் ஞேயம்) அறியவேண்டியது வேறு எதுவும் இல்லையோ, तत् ब्रह्म इति (தத் ப்ரஹ்ம இதி) அதுவே பரம் பொருள் என்று अवधारयेत् (அவதாரயேத்) உறுதியாக அறிந்துகொள்ள வேண்டும்.

"எதைப் பார்த்த பிறகு பார்க்கவேண்டிய பொருள் எதுவும் இல்லையோ, எந்த நிலையை அடைந்தபிறகு மறுபிறப்பு இல்லையோ, எதை அறிந்தபிறகு அறிய வேண்டியது எதுவும் இல்லையோ, அதைப் பிரம்மம் என்று உறுதி யாக உணர்ந்து கொள்ள வேண்டும்."

பரப்பிரம்ம போதமே அனைத்திலும் மேலா னது என்னும் கருத்து தொடர்ந்து இந்தச் சுலோகத்தில் வலியுறுத்தப்படுகின்றது. சாந் தோக்ய உபநிஷதம் உரைக்கின்றது. "எந்த உண்மையைத் தெரிந்துகொண்டால், கேட்கப் படாத ஒன்றைக் கேட்கின்ருேம்; பார்க்கப் படாத ஒன்றைப் பார்க்கின்ருேம்; அறியப் படாத ஒன்றை அறிகின்ருேம் - அந்த உண் மையைப் பற்றி நீ வினவினையா? —யேன அச்ருதம் ச்ருதம் பவதி அமதம் மதம் அவி ஞாதம் விஞாதம் இதி." பகவத் கீதையில் 'பிரம்மாவின் உலகங்கள் வரை அனைத்தும் பிறவிக்குட்பட்டவை; என்னை அடைந்தபிறகு, மறுபிறவி கிடையாது (8-13)' என்னும் பாட லின் கருத்தை 'ந புநர்பவ:' என்னும் சொற் கள் குறிப்பிடுகின்றன.

தோற்றத்திற்கு முழுமுதற்காரணமாக இருப் பது பிரம்மம். காரண, காரியம் இரண்டின் அடிப்படை ஒன்றே. காரணத்தின் தன்மையை அறிந்தவன் காரியத்தின் தன்மையை உணர் கின்ருன். "ஒரு மண் கட்டியின் உண்மையை உணர்ந்தால், மண்ணின் தன்மையை முழுதும் உணர்கிருன்; காணப்படும் வேற்றுமை அனைத் தும் சொற்களில், நாம ரூபங்களில் மட்டுமே. சத்தியமான வஸ்து மண் ஒன்றே." (சாந் தோக்ய உபநிஷத்) அதுபோல் அடிப்படை ஆதாரத்தை அறிந்தபின், அறிவதற்கு வேறு யாது உள்ளது? எனவேதான் பக்குவ மடைந்த சீடன் குருவைக் கேட்கும் போது, 'எதை அறிந்தால் எல்லாம் அறிந்தவை ஆகின்றனவோ அது யாது?—கஸ்மின்னு பக வன் விஞ்ஞாதே ஸர்வமிதம் விஞ்ஞாதம் பவதி' என்று ஆத்ம வித்யா அப்பியாசத் தைத் தொடங்குகின்ருன்.

तिर्यगूर्ध्वमधः पूर्णं सच्चिदानन्दमद्वयम् ।
अनन्तं नित्यमेकं यत्तद्ब्रह्मेत्यवधारयेत् ॥

तिर्यग् (திர்யக்) குறுக்கிலும் ऊर्ध्वं (ஊர்த்து வம்) மேலும் अधः (அத:) கீழும் पूर्णं (பூர்ணம்) நிறைந்தது सत् चित् आनन्द (சத் சித் ஆனந்த) சச்சிதானந்தமாய் अद्वयम् (அத்வயம்) இரண் டற்றது अनन्तं (அநந்தம்) வரம்பற்றது नित्यं (நித்யம்) என்றும் நிலைத்தது एकं (ஏகம்) ஒன் ருனது यत् (யத்) எதுவோ तत् (தத்) அதுவே ब्रह्मइति (ப்ரஹ்ம இதி) பரம்பொருள் என்று अवधारयेत् (அவதாரயேத்) உறுதியாக அறிய வேண்டும்.

"குறுக்கிலும் மேலும் கீழும் நீக்கமற

நிறைந்துள்ளது; சச்சிதானந்தம்; அத்வயப் பொருள்; வரம்பற்றது; நித்தியமானது; ஒன்ருக விளங்குவது எதுவோ, அதுவே பரம்பொருள் என உறுதியாக அறிய வேண்டும்.''

'நள்ளும் கீழ்உளும் மேல் உளும் யா உளும் எள்ளும் எண்ணெயும் போல் நின்ற எந்தையே' என்று திருவாசகம் வர்ணிக்கின்றது. 'பார்க்குமிடம் எங்கும் ஒரு நீக்கமற நிறைகின்ற பரிபூரண ஆனந்தமே' என்று தாயுமானவர் 'பூர்ணம்' என்ற பதத்திற்கு விளக்கத்தை அளிக்கின்ருர். பூர்ணமத: பூர்ணம் இதம்-என்று ப்ருஹத் ஆரண்யகம் புகட்டுவதும் இதுவே. விராட் சொருபமாய் விளங்கும் விஷ்ணுவை, 'திர்யக் ஊர்த்வம் அத: சாயி ரஷ்மய:' என்று புருஷ ஸூக்தம் புகழ்கின்றது. முண்டக உபநிஷத்தில் இத்தகைய வர்ணனையைக் காணலாம்.

''ப்ரஹ்மைவ இதம் அம்ருதம் புரஸ்தாத் ப்ரஹ்ம
பஸ்சாத் ப்ரஹ்ம தக்ஷிணதஸ்ச உத்தரேண
அதஸ்ச ஊர்த்துவஞ்ச ப்ரஸ்ருதம் ப்ரஹ்மைவ
இதம் விச்வமிதம் வரிஷ்டம்''

ஏனைய அடைமொழிகள் எளிதானவை; பலமுறை பயன்படுத்தப்பட்டவை.

अतद्व्यावृत्तिरूपेण वेदान्तैर्लक्ष्यतेऽद्वयम् ।
अखण्डानन्दमेकं यत्तद्ब्रह्मेत्यवधारयेत् ॥

अतत् व्यावृत्ति रूपेण (அதத் வ்யாவிருத்தி ரூபேண) 'இது அன்று' என்ற உபதேச முறையில் वेदान्तैः (வேதாந்தை:) வேதாந்த நூல்களால் लक्ष्यते (லக்ஷ்யதே) குறிக்கப்படுகின்றது; अद्वयम् (அத்வயம்) இரண்டற்றது, अखण्ड आनन्दं (அகண்ட ஆனந்தம்) எல்லையற்ற பேரானந்தம் एकं (ஏகம்) ஒன்ருனது यत् ......... अवधारयेत् (யத்.........அவதாரயேத்) (57 போல்)

பிரம்மத்தின் லக்ஷணத்தை எளிதில் விளக்க முடியாது. ஒருவாறு சுட்டிக்காட்ட இயலும். 'அவாங் மானஸ கோசரம் - வாக்கிற்கும், மனதிற்கும் எட்டாதது' என்ற மொழியின்படி அதை மனதால், வாக்கால் அறிவது எங்ஙனம் சாத்தியம்? வேதாந்த நூல்கள் (உபநிஷத்துகள்) பலவிதமான வர்ணனைகளைத் தந்தாலும், 'நேதி, நேதி' என்று நிஷேத முகமாக உணர்த்த முற்படுகின்றன. மனதிற்கு, வாக்கிற்கு எட்டியது எதுவோ 'அது இல்லை' என்பதே இந்த நெறியாகும். இங்ஙனம் அனைத்தையும் 'இது இல்லை' என்று தள்ளிக்கொண்டே வந்தால் எஞ்சுவது யாது? தள்ளப்படாத ஆதார வஸ்து யாது? அதுவே பிரம்மம். மகரிஷி ஸ்ரீ ரமணர் இதே தத்துவத்தை 'நான் யார்?' என்ற ஆத்ம விசாரணையில் குறிப்பிடுகின்ருர். "ஒருவன் எல்லாவற்றையும் சந்தேகிக்கலாம்; ஆனல் தன்னைத் தானே சந்தேகிக்க முடியாது." 'ய ஏவம் வேத அத ஆதேஷோ நேதி நேதிதி' என்று ப்ருஹதாரண்யகம் குறிப்பிடுகின்றது. மாண்டுக்ய உபநிஷத்தில் 'அசப்தம் அஸ்பர்சம்' என்று பிரம்மம் எதிர்மறை லக்ஷணங்களால் வர்ணிக்கப்படுவதைக் காணலாம்.

'யத் தத் ப்ரஹ்மேதி அவதாரயேத்' என்ற சொற்கள் நான்கு சுலோகங்களிலும் அமைக்கப்பட்டுள்ளன. மிகவும் முக்கியமான தத்துவத்தை வற்புறுத்திச் சொல்லும்பொழுது இத்தகைய முறையில் பலமுறை அது பயன்படுத்தப்படுகின்றது. 'அப்யாஸம்-திருப்பித் திருப்பிச் சொல்லுதல்' என்பது கிரந்த லக்ஷணங்களில் ஒன்று என நாம் கண்டுள்ளோம். 'கூறியது கூறல்' என்பது இலக்கியத்தில் குற்றமாகும். ஆனல் உபதேச முறையில் இது மிகவும் அவசியம். மந்த அதிகாரிக்குப் பலமுறை கூறப்படவேண்டும் என்பது தவிர, மிகவும் நுணுக்கமான விஷயத்தையும் திருப்பித் திருப்பி விளக்கவேண்டும். தற்போது கல்வியாளர்கள் பாடம் புகட்டும் முறையில் இந்த நெறிக்கு முக்கிய இடத்தைத் தந்துள்ளனர். நமது முன்னேர்களின் சிந்தனை எத்தனை எத்தனை ஆழமாக ஓடியுள்ளது என்பதை நாம் இதனுடன் ஒப்பிட்டு மகிழலாம்.

---

தாகசாந்தி பண்ணக்கூடியது ஒரு பொருள். ஒருவன் அதை ஜலம் என்கிருன். மற்ருெருவன் அதேபொருளைப் பானி என்கிருன். வேருெரு மனிதன் அதை வாட்டர் என்கிருன். ஆனல் மூவர் குறிப்பிட்ட பொருளும் ஒன்றே. பரம்பொருளும் அத்தகையவர்.

— ஸ்ரீ ராமகிருஷ்ணர்

# ஆத்ம தரிசனம்

(ஸ்ரீமத் சுவாமி சித்பவானந்தர் அவர்கள் 1982 இல் திருப்பராய்த்துறை ஸ்ரீ ராமகிருஷ்ண தபோவன அந்தர் யோகத்தில் நிகழ்த்திய சொற்பொழிவு)

सत्येन लभ्यस्तपसा ह्येष आत्मा सम्यग्ज्ञानेन ब्रह्मचर्येण नित्यम् ।
अन्तः शरीरे ज्योतिर्मयो हि शुभ्रो यं पश्यन्ति यतयः क्षीणदोषाः ॥

**ஸத்யேன லப்யஸ்தபஸா ஹ்யேஷ ஆத்மா**
**ஸம்யஜ்ஞானேன ப்ரஹ்மசர்யேண நித்யம்**
**அந்த: சரீரே ஜ்யோதிர்மயோ ஹி சுப்ரோ**
**யம் பச்யந்தி யதய: க்ஷீணதோஷா:**

புலனடக்கம் பழகி மனதைத் தூயதாக்கிய சான்றோர்கள் சரீரத்தினுள்ளே ஜ்யோதிர்மயமாகவும், பரிசுத்தமயமாகவும் விளங்கிக் கொண்டிருக்கும் ஆத்மாவைத் தரிசிக்கின்றார்கள். சத்திய விரதத்தினாலும் தவத்தினாலும் நிறை ஞானத்தினாலும் நித்ய பிரம்மச்சரியத்தினாலும் நாமும் அவ்வாத்மாவை உள்ளத்தினுள்ளே தரிசிக்கலாம்.

பஞ்சேந்திரியங்கள் மூலம் பெறுகின்ற ஞானம் நிறைஞானமாகாது. பஞ்சேந்திரியங்கள் மூலம் உலக அறிவைப் பெறலாம். பஞ்சேந்திரியங்களுக்குப் புலனாகும் பிரபஞ்சத்தின் அடிப்படையாக இருக்கும் பரம்பொருளை ஞானக் கண்கொண்டுதான் காணமுடியும். பரம்பொருளை அறிந்துகொள்வதற்குப் பஞ்சேந்திரியங்கள் பயன்படா. சிற்றுயிர்கள் பேருயிர்களாகப் பரிணமித்து வருகின்றன. அப்படி அவைகள் பரிணாமம் அடையும்பொழுது இந்திரியங்கள் ஒவ்வொன்றாக வந்தமைகின்றன. ஸ்தாவரங்களுக்கு ஓர் இந்திரியம்தான் உண்டு. அவைகளுக்கு ஸ்பரிச உணர்ச்சி தான் உண்டு. மண்ணிலுள்ள புழுக்களுக்கு ஸ்பரிச உணர்ச்சியோடு சுவையுணர்ச்சியும் வருகின்றது. எனவே அவைகளுக்கு இரண்டு இந்திரியங்கள் இருக்கின்றன. எறும்புக்கு அவ்விரண்டு இந்திரியங்களோடு மோப்பத்தை அறியும் உணர்ச்சியும் இருக்கின்றது. எனவே எறும்புக்கு மூன்று இந்திரியங்கள் இருக்கின்றன. சில ஈ வகைகளுக்குப் பார்வை இருக்கிறது. எனவே அவைகளுக்கு நான்காவது இந்திரியமாகிய கண்ணும் அமைந்திருக்கிறது. தேனீக்கள் ஓசையைக் கேட்கக்கூடிய ஐந்தாவது இந்திரியத்தையும் பெற்றிருக்கின்றன. தேனீ ஐந்து இந்திரியங்களைப் பெற்றிருக்கிறது. பறவைகளும் விலங்குகளும் ஐந்து இந்திரியங்களைப் பெற்றிருக்கின்றன. மனிதனுக்கும் ஐந்து இந்திரியங்கள் இருக்கின்றன. ஐந்து இந்திரியங்களைக்கொண்டு அறியப்படுபவையெல்லாம் பிரபஞ்ச சம்பந்தப்பட்டவைகளாகும். ஓர் இந்திரியத்துக்கு மற்றோர் இந்திரியம் துணையாக அமைந்திருக்கிறது. ஐந்து இந்திரியங்களைப் பயன்படுத்துவதோடு மனிதன் தன் அறிவையும் பயன்படுத்தவேண்டும். மனிதன் தன் அறிவைச் சரியாகப் பயன்படுத்தினால் பரமனை அடையத் தகுதி உடையவனாகின்றான்.

பஞ்சேந்திரியங்களைப் பண்படுத்துவது தவமாகும். பஞ்சேந்திரியங்களை அடக்கி ஆளுதல் பிரம்மச்சரியம் ஆகும். வீடுபெற நில் என்பது ஔவைப் பிராட்டியின் வாக்கு. பிரபஞ்சம் நமக்கு வீடு அன்று. பிரபஞ்சத்துக்கு நாம் பயிற்சிக்காக வந்திருக்கின்றோம். சிறுவர்கள் பள்ளிக்கூடத்துக்குக் கல்வி கற்பதற்காக வருகின்றார்கள். கல்வி கற்றான உடன் பள்ளியை விட்டு வெற்றியுடன் வெளியேறுகின்றார்கள். மனதைப் பண்படுத்துவதற்காக ஜீவர்களாகிய நாம் இப்பிரபஞ்சத்துக்கு வந்திருக்கின்றோம். நிரந்தரமாக நாம் இங்கு இருப்பதற்கு வந்தவர்களல்லர். எவ்வளவுக் கெவ்வளவு விரைவில் மனதைப் பண்படுத்துகிறோமோ அவ்வளவுக்கவ்வளவு பிரபஞ்சத்தை நன்கு பயன்படுத்தியவர்களாகின்றோம். பிறப்பு இறப்புக்கு உள்ளாகிக்கொண்டிருக்கின்ற நாம் பிரபஞ்சத்துக்குள் உழன்று கிடக்கின்றோம். நாம் அடைய வேண்டிய லட்சியத்தை அடையாது பிரபஞ்சத்துக்குள் உழன்று கிடப்பது பொருந்தாது.

நாம் லட்சியத்தை அடையும் பொருட்டு என்ன செய்யவேண்டும்? தவத்தின் மூலம் நாம் பெற்றுள்ள பஞ்சேந்திரியங்களை அடக்கி ஆளவேண்டும். பஞ்சேந்திரியங்களை முறையாக அடக்கி ஆள்வதற்கேற்பப் பண்பாட்டில்

மேலே வருகின்றோம். இவ்வுண்மையை ரிஷிகள் ஆராய்ச்சி செய்தார்கள். ஓர் இந்திரியம் கெட்டுப் போனால் அதை ஈடுசெய்வதற்கு மற்றோர் இந்திரியம் திறம்பட வேலை செய்யும். இதை உலகில் நாம் காணலாம். மக்களுள் கண் குருடாகப் பிறப்பவர்களுக்குக் காது நன்றாகக் கேட்கும். பிறக்கும்பொழுது செவிடாக இருப்பவர்களுக்குக் கண் நன்றாகத் தெரியும். ஓர் இந்திரியம் கெட்டுப்போய்விட்டால் மற்றோர் இந்திரியம் அதற்கு ஈடு செய்கிறது. ஹெலன் கெல்லர் என்ற அமெரிக்க அம்மையார் ஒருவர் இருந்தார். அவருக்குக் கண் பார்வையும் இல்லை; காதும் கேளாது; வாய் பேசாத ஊமையாகவும் இருந்தார். அந்த அம்மையாருக்கு ஸ்பரிச உணர்ச்சியும் மோப்ப உணர்ச்சியும் மிக நுண்ணியவைகளாக அமைந்திருந்தன. ஒருதடவை ஒருவரைத் தொட்டுப் பார்த்துவிட்டால் அடுத்த தடவை அவர் தொடும்பொழுது அந்த ஆள் யார் என்று சொல்லிவிடுவார். அவரிடத்தில் ஊறு என்ற உணர்ச்சி அவ்வளவு பண்பாடு அடைந்திருந்தது.

ஓர் இந்திரியத்துக்குக் குறை வந்துவிட்டால் அதற்கு ஈடு மற்ற இந்திரியங்கள் திறமை உடையவைகள் ஆகின்றன என்பதையறிந்த ரிஷிகள் ஐந்து இந்திரியங்களையும் கட்டி ஆண்டால் என்ன ஆகும் என்று ஆராய்ச்சி செய்தார்கள். நவீன விஞ்ஞானிகள் புறத்திலுள்ள பொருள்களை ஆராய்ச்சி செய்து உண்மைகளைக் கண்டார்கள். ரிஷிகள் மானுட ஜீவிதத்தையே ஆராய்ச்சி செய்தார்கள். ஐம் பொறிகளையும் அடக்குவதுதான் விரதமாகும்.

உரன்என்னும் தோட்டியான் ஓர்ஐந்தும் [காப்பான்
வரன்என்னும் வைப்பிற்கோர் வித்து

என்பது குறள். ஐந்து இந்திரியங்களையும் புலன்களில் போகவொட்டாமல் காப்பாற்றுகின்றவன் அழிவில்லாத பெருநிலைக்கு வித்திட்டவனாகின்றான். சிவனுக்கு முக்கண்ணன் என்னும் பெயர் உண்டு. அவரிடத்திலுள்ள நெற்றிக்கண் ஞானக்கண்ணாகும். அந்த ஞானக்கண்ணைப் பயிற்சியினால் நாம் அடையலாம். பஞ்சேந்திரியங்கள் மானுடப்பிறவி எடுப்பதற்கு முன்பு செய்த முயற்சியினால் நமக்கு வந்து அமைந்துள்ளன. மானுடப் பிறவி எடுத்தான பிறகு பயிற்சியினால் ஞானக் கண்ணைப் பெறலாம். ஞானக்கண்ணைப் பெற்றான பிறகு பிறவி பூர்த்தியடைகின்றது. பிறகு பிறப்பு எடுப்பதில்லை. பரஞானம் அடைய விரும்புகின்றவர்கள் அதன் பொருட்டுப் பிரம்மச்சரியம் அனுஷ்டிக்கின்றார்கள். அறிவைப் பயன்படுத்தி ஐந்து இந்திரியங்கள் புலன்கள் வசம் ஆசைப்பட்டுப் போவதைத் தடுத்து நிறுத்தி வைக்கின்றவர்களுக்குப் பேராற்றல் உண்டாகிறது. புலன்கள் வசப்பட்டு இந்திரியங்கள் செல்லும்பொழுது உயிர்கள் அழிகின்றன என்பதை இயற்கையை ஆராய்ந்து பார்த்தால் அறியலாம். தூண்டிலில் வைக்கப்பட்டுள்ள இரையை நாடி வரும் மீன் தூண்டிலில் அகப்பட்டுக்கொள்கின்றது. சுவை என்ற புலனின்பத்தில் மீன் தன் உயிரைக் கொடுக்கிறது. விளக்கு வெளிச்சத்தில் விட்டில் பூச்சிகள் பறந்து வந்து விழுவதைப் பார்க்கிறோம். ஒளி என்னும் புலனின்பத்தில் அகப்பட்டு விட்டில் பூச்சி தன் உயிரைக் கொடுக்கிறது. பழகிய பெண் யானையைக்கொண்டு காட்டு யானையைக் கொப்பத்தில் விழும்படி செய்து யானை பிடிக்கின்றார்கள். ஊறு என்னும் புலனின்பத்துக்கு வசப்பட்டு யானை மனிதனுக்கு அடிமையாகின்றது. வேடர்கள் பறையை அடிப்பார்கள். அவ்வோசையைக் கேட்டு மான் ஸ்தம்பித்து வயிறு உப்பி நின்றுவிடும். அப்பொழுது வேடர்கள் அதைப் பிடித்துவிடுவார்கள். ஓசை என்னும் புலனின்பத்துக்கு மான் அடிமைப்பட்டு வேடன் கையில் அகப்பட்டுக்கொள்கிறது. கருவண்டு நாற்றம் என்னும் புலனின்பத்துக்கு அடிமைப்பட்டுப் பூவில் அகப்பட்டுச் சாகிறது. ஓர் இந்திரியத்துக்கு அடிமைப்பட்டு உயிர்கள் அழிவதை இயற்கையில் நாம் காண்கின்றோம். ஐந்து இந்திரியங்களுக்கும் அடிமைப்படுகின்ற மனிதனின் கதி என்னவது? அப்படி மனிதன் அடிமைப்பட்டிருக்கும் காலம்வரை பிறவிப் பெருங்கடலில் உழன்றுகொண்டேயிருப்பான். அப்படி உழல்வதைத் தவிர அவனுக்கு வேறு கதி இல்லை. பிறவிப் பெருங்கடலைக் கடக்க விரும்பினால் விரதங்களுள் மகாவிரதமாகிய பிரம்மச்சரிய விரதத்தைக் கடைப்பிடிக்கவேண்

டும். ஐந்து இந்திரியங்கள் மூலமாகப் பிரபஞ்சத்திலுள்ள சுகத்தை உயிர்கள் அனைத்தும் நாடிச்செல்கின்றன. இந்நிலையை இயற்கை எங்கும் நாம் காணலாம். பொறிகளைப் புலன்களிடத்துச் செல்லவிடாமல் தடுப்பது பிரம்மச்சரிய விரதமாகும். காமத்தை வெல்லுவது தான்பிரம்மச்சரியத்தின் முக்கியநோக்கமாகும். காமத்தை வெல்லவேண்டுமென்பதற்குச் சிவபெருமானே முன்மாதிரியாக இருக்கின்ருர். சிவபெருமான் தம் சொரூபத்தில் ஆழ்ந்து மூழ்கியிருப்பதன்மூலம் ஆழ்ந்த தபசியாகக் காட்சி கொடுக்கின்ருர். பிரபஞ்சத்துக்கும் அவருக்கும் ஒரு சம்பந்தமும் இல்லாது அந்நிலையில் இருக்கின்ருர். அவரிடத்தில் ஆசையை ஊட்டுவதற்காக மன்மதன் காமவெறி என்ற அம்பை எய்தான். சிவபெருமான் தம் நெற்றிக் கண்ணைத் திறந்து மன்மதனைப் பஸ்பமாக்கினர். சிவபெருமானிடத்தில் இத்தகைய காமதகனம் நிகழ்ந்தது. அன்னை பராசக்தி பார்வதி தேவியாக இருந்து தம்மைச் சிவத்துக்கு உரியவளாக ஆக்கும்பொருட்டுக் கன்னியாகுமரியில் தவம் செய்கின்ருள். சிவனர் தவத்தின் மூலம் தம் சொரூபத்தில் ஆழ்ந்திருக்கின்ருர். அம்பிகையினுடைய தபசில் ஜடசக்தி சித்சக்தியாக மாறுகிறது. சிவபெருமானுடைய காமதகனத்துக்குப் பிறகு பார்வதி பரமேசுவரன் கல்யாணம் நடைபெறுகிறது. ஈண்டு உலக மக்களுக்குப் பெரிய பாடம் அமைந்திருக்கிறது.

சிற்றின்ப நுகர்ச்சியை வேண்டியவாறு அனுபவிப்பது விவாகத்தின் நோக்கம் அன்று. விவாகம் செய்துகொண்டவர்கள் தங்கள் விருப்பம்போல் காம நுகர்ச்சியை அனுபவித்து வரலாம் என்று எண்ணுவது தவறு. வர்ணச்ரம தர்மத்தின்படி நான்கு ஆச்ரமங்கள் அமைந்திருக்கின்றன. பிரம்மச்சரிய ஆச்ரமம், கிரஹஸ்தாச்ரமம், வானப் பிரஸ்தாச்ரமம், சந்நியாச ஆச்ரமம் என்பன அந்நான்கு ஆச்ரமங்களாகும். பிரம்மச்சரிய ஆச்ரமத்தில் ஒருவன் வெற்றி அடைந்தபிறகுதான் கிரஹஸ்தாச்ரமத்துக்குச் செல்ல வேண்டும். அப்பொழுதுதான் பண்பட்ட சமுதாயம் அமையமுடியும். மக்கள் எவ்வளவுக்கெவ்வளவு புலனடக்கம் பழகுகின்ருர்களோ அவ்வளவுக்கவ்வளவு சமுதாயத்தில் நாகரிகம் வளரும். மனம்போன போக்கில் போவது அடக்கத்தோடு கூடிய வாழ்க்கையாகாது. அடக்கமில்லாத வாழ்க்கை வாழ்வதை இச்சா சுதந்திரம் என்று சொல்லுகிருர்கள். கட்டுப்பாடான வாழ்க்கை இல்லாது வாழ்கின்ற வாழ்க்கை வாழ்க்கையன்று. புலனடக்கம் பழகுகின்ற சமுதாயத்தில் தான் சான்ரோர்கள் தோன்றுகின்ருர்கள். பார்வதி, பரமேசுவரன் கல்யாணம் தான் கல்யாணமாகும். காமத்துக்கு வசப்பட்ட கல்யாணம் கல்யாணமன்று. காமத்தை வென்ரன பிறகுதான் சீதைக்கும் இராமனுக்கும் மணம் நிகழ்கிறது. ஸ்ரீ ராமகிருஷ்ணர் சாரதாதேவியார் மணமும் காமத்தை வென்ற பிறகுதான் நிகழ்ந்தது.

ஸ்ரீ ராமகிருஷ்ணருடைய தந்தையார் ஸ்ரீராமகிருஷ்ணர் சிறுவராக இருந்தபொழுதே இறந்துவிட்டார். எனவே ஸ்ரீ ராமகிருஷ்ணர் தம் அண்ணன் பராமரிப்பில்தான் வளர்ந்து வந்தார். அவருக்கு இளமையில் கதாதரன் என்பது பெயர். அவருக்குத்தெய்வப் பித்துப் பிடித்துவிட்டது. தெய்வத்திடம் அவர் நடந்துகொண்ட முறையைப் பார்த்த மக்கள் அவருக்குப் பித்துப்பிடித்துவிட்டதாக எண்ணினர்கள். அந்தச் செய்தி கமார்புகூரிலிருந்த தாய்க்கும், தமையனர் ராமேசுவரருக்கும் எட்டியது. கதாதரனுக்குச் சில ஆண்டுகளுக்கு முன்பே விவாகத்தை முடித்திருந்தால் இந்த நிலை அவருக்கு வந்திருக்காது என்று எண்ணினர்கள். இனியாவது அவனை உலகப் பந்த பாசத்தில் கட்டவேண்டுமென்று விவாகத்துக்கு ஏற்பாடு செய்தார்கள். விவாகம் செய்வதற்கு அவருக்குப் பெண் தேடினர்கள். பெண் எங்கும் அகப்படவில்லை. அதனல் தாய்க்குக் கவலை வந்துவிட்டது. தாயாரின் மனநிலையை அறிந்த கதாதரன் பரவசநிலையில் இருந்துகொண்டு சொல்கின்ருர். "தாயே! எனக்காக அங்கும் இங்கும் பெண் தேடி அலையவேண்டாம். எனக்கென்றே தெய்வாதீனமாக அமைந்த பெண் ஒருத்தி ஜயராம்பாடியில் ராமச்சந்திரமுகோபாத்தியாயர் வீட்டில் பிறந்து வளர்ந்து வருகின்ருள். அங்குச் சென்று விவாகத்துக்குப் பெண் பேசி வாருங்கள். நீங்கள் வெற்றி அடைவீர்கள்."

அதைக்கேட்டுத் தாய் மகிழ்ச்சி அடைந்தாள். அவர் கூறியபடி ஜயராம்பாடிக்குச் சென்று ராமச்சந்திரமுகோபாத்தியாயர் வீட்டை அடைந்தார்கள். ஆங்குச் சாரதை என்ற பெயருடன் ஐந்து வயது நிரம்பிய பெண் இருந்தாள். ஆனால் கதாதரனுக்கோ அப்பொழுது இருபத்து மூன்று வயது பூர்த்தியாகும் நிலையில் இருந்தது. வயதில் பெரிய வித்தியாசம் இருந்தாலும் விவாகம் முடிந்துவிட்டால் கதாதரன் மனம் மாறிவிடும் என்று விவாகத்துக்கு ஏற்பாடு செய்தார்கள். விவாகத்துக்கு முன்பு ஸ்ரீ ராமகிருஷ்ணர் அம்பிகையிடம் பிரார்த்தனை செய்ததாவது :

"ஜகதாம்பா! இந்தச் சிறுமியினுடைய உள்ளத்தில் உலக ஆசையை எல்லாம் துடைத்து எடுத்து விடுவாயாக. இந்த விவாகத்தால் பாரமார்த்திக வாழ்வுக்கு இடைஞ்சல் வந்து அமைந்துவிடக்கூடாது." விவாகம் நடைபெற்றது. விவாகம் முடிந்ததும் ஸ்ரீசாரதாதேவியாரைப் பிறந்தகத்தில் விட்டுவிட்டு ஸ்ரீ ராமகிருஷ்ணர் தக்ஷிணேசுவரத்துக்குச் சென்றார். அப்பொழுது ஸ்ரீ சாரதாதேவியாரிடம் அவர் பகர்ந்ததாவது: "நாம் கடவுள் வழிபாட்டுக்காகப் பிறந்திருக்கின்றோம். கடவுள் வழிபாட்டில் தீவிரமாக ஈடுபடவேண்டும். அவர் தக்ஷிணேசுவரம் சென்றபிறகு விவாகமான நிகழ்ச்சியை அடியோடு மறந்துவிட்டார்.

மனிதன் வாழ்க்கையில் பல சம்ஸ்காரங்களைப் பெற்றுவருகின்றான். அப்படி அவன் பெறுகின்ற சம்ஸ்காரங்களுள் விவாகத்தின் மூலம் பெறுகின்ற சம்ஸ்காரம் மிகப் பெரிய சம்ஸ்காரமாகின்றது. 'நான் விவாகம் செய்துகொண்டிருக்கிறேன்' என்னும் எண்ணம் மனதில் ஆழ்ந்து பதிந்து விடுகின்றது. ஆனால் ஸ்ரீ ராமகிருஷ்ணருடைய உள்ளத்தில் அப்பதிவு சிறிதும் பதியவில்லை. விவாகத்துக்குப் பிறகு அதை அடியோடு மறந்துவிட்டு அவர் அருள் நாட்டத்தில் தீவிரமாக ஈடுபட்டார். சாரதாதேவியாரும் தம் போக்கில் தாய் தந்தையருக்குப் பணிவிடை செய்வதில் தீவிரமாக ஈடுபட்டிருந்தார். அருள் உள்ளம் படைத்திருந்த அவ்விருவரும் பாரமார்த்திக வாழ்வில் ஈடுபட்டிருந்தார்கள். ஆனால் உலக மக்கள் சாரதையைப் பார்த்த பொழுதெல்லாம் "இவள் பித்தனுடைய மனைவி' என்று பரிகாசம் செய்தார்கள். ஸ்ரீ சாரதைக்கு வயது ஏற ஏற உலக மக்கள் கூறுவது உண்மையெனில் "என் கணவனுக்கு உடனிருந்து பணிவிடை செய்வது என் கடமையாகும். பித்துப் பிடித்திருக்கும் நிலையில் அவரை ஒதுக்கிவிட்டு நான் இங்கிருப்பது முறையாகாது" என்று எண்ணினாள். தம் எண்ணத்தைத் தந்தையாரிடம் நேரில் சொல்லாமல் மறைமுகமாக வெளியிட்டாள். "இங்கிருந்து கங்கா ஸ்நானத்திற்குப் பெண்கள் கல்கத்தா செல்கின்றார்கள். நானும் அவர்களுடன் கல்கத்தா போகிறேன்" என்று தந்தையாரிடம் ஸ்ரீசாரதா தேவியார் கூறினார். "நானே உன்னைக் கல்கத்தாவுக்கு அழைத்துச் செல்கின்றேன்" என்று தந்தையார் கூறினார். ஸ்ரீசாரதா தேவியாரை அழைத்துப் போகும்பொழுது ஸ்ரீ ராமகிருஷ்ணர் சாரதா தேவியாரை ஏற்றுக்கொள்வாரோ ஏற்றுக்கொள்ளமாட்டாரோ என்ற கவலை ராமச்சந்திரமுகோபாத்தியாயருக்கு இருந்தது. ஸ்ரீ சாரதா தேவியாருக்கும் அந்தக்கவலை இருந்தது. தக்ஷிணேசுவரத்தை அடைந்ததும் ஸ்ரீராமகிருஷ்ணர் மாமனாரையும் மணந்துகொண்ட மனைவியையும் பேரன்புடன் வரவேற்றார். அவர்கள் இருவரும் பரமதிருப்தி அடைந்தார்கள். ராமச்சந்திரமுகோபாத்தியாயர் ஸ்ரீ சாரதா தேவியாரைத் தக்ஷிணேசுவரத்தில் விட்டு விட்டுக் கவலையற்றவராகத் தம் ஊருக்குத் திரும்பினார்.

ஸ்ரீ ராமகிருஷ்ணர் தம் பதிவிரதையிடம் பகர்ந்ததாவது: "நான் உடல், பொருள், ஆவி அனைத்தையும் பராசக்திக்கு ஒப்படைத்துவிட்டேன். ஆனால் நான் உன்னை மணந்திருக்கின்றேன். நான் உன் விருப்பத்தை நிறைவேற்றக் கடமைப்பட்டிருக்கின்றேன். நீ விரும்புவது யாது?" "உலக பந்த பாசத்தில் உங்களைத் தள்ளுவதற்கு நான் இங்கு வரவில்லை. உங்களுக்குப் பணிவிடை செய்து நீங்கள் அடைந்த பெருநிலையை நானும் அடைய விரும்பி இங்கு வந்துள்ளேன்" என்று சாரதை பகர்ந்தார். இதைக்கேட்டுப் பரமஹம்சர் தாம் அன்னை பராசக்தியிடம்செய்த பிரார்த்தனைக்குப் பராசக்தி அனுக்கிரகம் புரிந்திருக்கிறாள் என்று எண்ணிப் பெருமகிழ்வு அடைந்தார்.

(தொடரும்)

# ஸ்ரீமத் பாகவதம்

( சுவாமி ஸதானந்தர் )

பாண்டவ கௌரவ குருக்ஷேத்திரப் போரில் ஈடுபட்ட போர் வீரர்களுள் ஒன்பது பேர்களே உயிர் தப்பினர். போர்க்களத்தினின்று எட்டப்போய் ஒருகுளத்தில் சிரம பரிகாரம் செய்து கொண்டிருந்த துரியோதனனைத் துவந்த யுத்தத்துக்குஅழைத்துப் பீமன் கதைப் போரில் துரியோதனன் துடையைப் பிளந்தான். மரணப் படுக்கையில் கிடக்கும் தன் அரசனாகிய துரியோதனனைத் திருப்திப் படுத்தவேண்டி இரவில் பாண்டவர்களின் பாசறைக்குள் நுழைந்து தூங்கிக் கொண்டிருந்த இளம் பாண்டவர்கள் (திரௌபதியின் ஐந்து புத்திரர்கள்) ஐவரையும் அசுவத்தாமன் கொன்று அடாத செயல் செய்துவிட்டான். அந்த ஐந்துபேர்களின் தலைகளைக் கண்டு தன் அரசன் திருப்திப்படுவான் என்று கருதி அசுவத்தாமன் துரியோதனனிடம் கொண்டுவந்து காட்டினான். ஆனால் துரியோதனன் அதனால் திருப்தி அடையவில்லை. தன் பிரிய புத்திரர்களின் இந்தக்கோரமுடிவைக்குறித்துத் திரௌபதி கதறிப் பதறினாள்.அவள் துயரம் மற்றவர்களையும் உருக்கியது. அவளுக்கு ஆறுதல் அளித்தல் பொருட்டு அர்ஜுனன் இங்ஙனம் பகர்ந்தான்: "உத்தமியே, பிராம்மணர்களில் கடைப்பட்டவனாகிய அந்த அசுவத்தாமனின் தலையை இதோ கொண்டுவந்து உனக்குக் காட்டுகிறேன். அவன் தலையின்மேல் நின்று அவன் ரத்தத்தில் நீராடி உன் பழியைத் தீர்த்துக்கொள். கேடுகெட்ட அந்த அதமனின் இந்தப் பாபச் செயலுக்கு அதுவே தக்க தண்டனை ஆகும்." திரௌபதிக்கு இங்ஙனம் ஆறுதல் கூறிவிட்டுத் தனஞ்ஜயன் தன் கவசங்களைத் தரித்துக்கொண்டு தன் பிரசித்தமான காண்டீவத்தைக் கையில் ஏந்தி ரதத்தில் புறப்பட்டான். தன் குரு புத்திரன் ஆகிய அசுவத்தாமனைத் துரத்திக்கொண்டு போனான். பாதகனாகிய அந்த அசுவத்தாமன் தன்னை நோக்கி அர்ஜுனன் வருவதைப் பார்த்தான். அவன் பயந்து நடுங்கிப்போய்த் தன் உயிரைக் காத்துக் கொள்ளுதல் பொருட்டு ஓட்டம் பிடித்தான். அவனைக்காப்பார் யாருமில்லை. அவன் குதிரைகள் மிகவும் களைத்துப் போயிருந்தன. இத்தகைய நிராதரவானநிலையில் தன் உயிரைக்காத்துக்கொள்வதற்கு, வேறு வழியின்றி, அவன் பிரம்மாஸ்திரத்தை நினைத்தான். அவனுக்குப் பிரம்மாஸ்திரத்தைப் பிரயோகிக்கத் தெரியுமே தவிர அதைத் திரும்ப அழைத்துக் கொள்ள, செயலிலிருந்து அதை மீட்கத்தெரியாது. ஆயினும் இந்த நெருக்கடியான நிலையில் தன்னைக் காத்துக்கொள்ளுதல் பொருட்டுப் பிரம்மாஸ்திரத்தைஏவினான். அது நாலாப் பக்கமும் சுடர்விட்டுக் கொண்டு பயங்கரமாக முன்னேறியது. தன் உயிருக்கு ஆபத்து வந்ததை அறிந்த அர்ஜுனன் கவலையோடு ஸ்ரீ கிருஷ்ணனிடம் இங்ஙனம் விண்ணப்பித்தான்.

"அஸ்திரசஸ்திரங்களின், வல்லமை வாய்ந்த ஆயுதங்களின் இறைவா, கிருஷ்ணா, இவ்வுலகின் தாபங்களிலிருந்து பக்தர்களை ரக்ஷிக்கும் ஜகந்நாதா, இப்பிரபஞ்சத்தின் தோற்றம், இருப்பு, ஒடுக்கத்திற்குக் காரணமான ஆதி மூலமே, இந்த ஜகத் முழுதையும் பரிபாலனம் பண்ணும் கோபாலா, பிரகிருதியின் தலைவா, நீ பாற்கடலில் யோக நித்திரையில் இருந்தாலும் இந்த ஜகத்தின் இயக்கத்துக்குக் காரணனான ஜகந்மோஹனா, ஜகத்தை மயக்கும் மாயைக்கு நீயே அதிபதி. உன்னிடத்திலிருந்து தோன்றிய இச்சாசக்தி அது. இந்த ஜீவர்களுக்கெல்லாம் மேலான ஆனந்தத்தை ஊட்டும் ஜனார்த்தனா, மாயைக்கு ஒருநாளும் நீ வசப்படமாட்டாய். ஆயினும் மாயையில் சிக்கித்தவிக்கும் உலக மக்களுக்கு அருள்புரியும் ஹிருஷிகேசா, உன்னுடைய இந்த அவதாரம் பூபாரம் துடைத்தல், தீயாரைத் துடைத்தல் மட்டுமன்று; நல்லாரை, பக்தர்களைக் காத்தல், உய்வித்தல் பொருட்டும் ஆகும். பக்தர்களைக் காப்பதில் பித்துப்பிடித்தவன் போன்று இருக்கும் பக்தவத்ஸலா, உன் உறவினர்களாகிய எங்கள் மேல் நீ எவ்வளவு அன்பைக் கொட்டியிருக்கிறாய். உனது திவ்விய மங்கள சொரூபத்தை என்றும் உன் பக்தர்கள் தியானிக்கிறார்கள். தேவ தேவா, வேகமாக வருகிற

இந்தத் தகிக்கிற ஜுவாலை எங்கிருந்து வருகிறது? இதை ஏவியவன் யார்?"

ஸ்ரீ கிருஷ்ணன் பதில் சொன்னதாவது: "அருமை நண்பா, இது பிரம்மாஸ்திரம். உயிருக்குப்பயந்து அசுவத்தாமன் இதை விட்டிருக்கிறன். இந்தப்பிரம்மாஸ்திரத்தை அவனுக்குத் திருப்பி அழைக்கும்முறை தெரியாது.பிரம்மாஸ்திரத்தைப் பிரம்மாஸ்திரத்தால்தான் முறியடிக்கமுடியும். ஆயுதப் பிரயோகங்களில் தேர்ந்தவனுகிய நீயும் அக்கொடியவனின் அஸ்திரத்தை வெல்ல பிரம்மாஸ்திரத்தைப் பிரயோகிப்பாயாக."

சூதர் சொன்னது: "எதிரிகளைத் துடைத்துத் தள்ள வல்ல பார்த்தன் ஸ்ரீ கிருஷ்ண பரமாத்மாவின் வார்த்தைகளைக் கேட்டு ஆசமனம் செய்தான். (ஆசமனம் = மூன்று தடவை துளி நீரைப் பருகிக்கொண்டு பகவந் நாமத்தைச் சொல்லுதல்) மூன்று தடவை ஸ்ரீ கிருஷ்ணனை வலம் வந்து பிரம்மாஸ்திரத்தை ஜபித்து ஏவினுன். இரு ஆயுதங்களும் விண்ணில் உயரத்தில் சந்தித்தன. அவைகளிலிருந்து வெளிப்பட்ட தீக்கதிர்கள் விண்வெளியைப் பிரகாசப்படுத்தின. பிரளயகாலம் வந்துவிட்டது போன்று தோன்றியது. ஜீவராசிகள் யாவும் தங்களது முடிவுகாலம் வந்துற்றது எனப் பீதியடைந்தன. ஸ்ரீ வாசுதேவரின் கட்டளைப்படி அர்ஜுனன் இரண்டு அஸ்திரங்களையும் மீட்டு அழைத்துச் சாந்தப்படுத்தினுன். பிறகு அர்ஜுனன் துரோகியாகிய அந்தப் அசுவத்தாமனைப் பலியிடப் போகிற யாகப் பசுவைப்போன்று தேரில் கட்டித் தங்கள் பாசறைக்கு அழைத்துச் சென்றுன். கோபத்தால் சிவந்த கண்களை உடைய அர்ஜுனனைப் பார்த்துக் குளிர்ந்த தாமரைக் கண்ணன் இங்ஙனம் இயம்பினுன்.

"அந்தணர்களில் கேடுகெட்ட கடைத்தரமான இவனைக் கொல்லாது விடலாகாது. பாசறையில் அமைதியாகத் தூங்கிக்கொண்டிருந்த குற்றமற்ற கள்ளம் கபடமற்ற இளம் பாண்டவர்களைக் கசாப்புக்கடைக்காரன் போன்று வெட்டி மாய்த்துவிட்டான். நேர்மையான வீரன், விரோதியானுலும் கூட அவன் குடித்துவிட்டு நிதானம் தவறியிருக்கும் போதோ, கவனமின்றி இருக்கும் போதோ, பைத்தியம் பிடித்து விட்டாலோ, ரதமின்றியோ ஆயுதமின்றியோ இருந்தாலோ சரணடைந்துவிட்டாலோ ஒருநாளும் கொல்லமாட்டான். மேலும் குழந்தைகள், பெண்பாலர், வயோதிகர், பயந்துபோனவர்கள் ஆகிய இவர்களையும் நேர்மையான வீரன் ஒருநாளும் கொல்லமாட்டான். அறிவின்றி வெட்கமின்றிப் பிறரைக் கொன்று தன்னைக் காத்துக்கொள்கிற பாபியைக் கொல்லுதல் ஒருநாளும் பாபமாகாது. மரண தண்டனை அவனுக்குத் தகும். இதுவே தர்மயுத்தம், சுத்தவீரனின் தவம் ஆகும். இத்தகைய சரியான தண்டனை தராவிட்டால் அவன் அழிவதும் நரகத்தில் இடர்ப்படுவதும் உறுதி. மேலும் தன் மக்களை இழந்து பரிதவிக்கும் பாஞ்சாலியிடம் இவனது தலையைக் கொண்டுவருவதாக வாக்களித்திருக்கிருய். ஆகையால் இவனைக் கொன்றுவிடு. அர்ஜுனு, இவன் நமக்கு ஈடுசெய்ய முடியாத பெருநஷ்டம் விளைவித்தது மட்டுமன்றித் தன் யஜமானனுகிய துரியோதனனுக்கும் துரோகம் செய்துள்ளான்."

ஸ்ரீ கிருஷ்ணன் இங்ஙனம் ஊக்குவித்தும் அர்ஜுனன் அசுவத்தாமனைக் கொல்லவில்லை. அவனை இழுத்துக்கொண்டு போய்த் தங்கள் பாசறையில் அழுது புலம்பிக்கொண்டிருந்த திரௌபதியின் முன்பு விட்டான். விலங்கு போன்று கட்டப்பட்டிருந்த அவனைத் திரௌபதி பார்த்தாள். அப்போது அவன் சோகமே வடிவெடுத்தவனுய் இருந்தான். தனது மகாபாதகச் செயல்களுக்காக அவன் மிகவும் துன்பப்படுவதாகத் தோன்றியது. இதைப் பார்த்துப் பாஞ்சாலிக்கு மிகவும் இரக்கம் உண்டாயிற்று. அவனுக்குச் செய்யப்பட்ட இழிவையும் கட்டப்பட்ட நிலையில் அவன் நிற்கும் கோலத்தையும் பார்த்து அவளால் பொறுக்க முடியவில்லை. தன் கணவனுன அர்ஜுனன் காலில் விழுந்து வணங்கி இங்ஙனம் பரிந்து விண்ணப்பித்தாள்:

"பிரபோ, அந்தணனுகிய இவனை விடுவிப்பீராக. நமது குருபுத்திரன் இவன். குருபுத்திரனும் குருவுக்கு நிகர். நீங்கள் தனுர் வித்தையை முழுமையாகத் துரோணரிடம் கற்றுக் கொண்டீர்கள். வல்லமை மிக்க அந்தத் துரோணர் இப்போது தம் மகன் வடிவத்தில் வாழ்

கிறார். இவனுடைய தாயார், துரோணரின் சஹ தர்மிணி. இன்னும் உயிருடன் வாழ்கிறார். தம் வீரமைந்தன் உயிருடன் இருப்பதால் தான் பெருமைமிக்க கிருபி, துரோணரின் உயிராக, ஈருடல் ஓர் உயிராக இருந்தும் அவருடைய உடலைத் தகனம் பண்ணும்போது உடன்கட்டை ஏறாமல் தம்மை உயிரோடு வைத்துக்கொண்டிருக்கிறார்.

ஐயனே, நமது ஆச்சாரியரின் குடும்பத்துக்கு ஒருநாளும் நாம் தீங்கு செய்துவிடலாகாது. அது நமக்குத் தகாது. நாம் வழிபட வேண்டிய அவர்களுக்கு உதவியும் அன்பும் மரியாதையும் செய்யவேண்டும். என் புத்திரர்களை இழந்து நான் தவிப்பது போன்று கிருபியும் தவிக்க வேண்டாம். கோபத்தை அடக்கமுடியாத க்ஷத்திரியன், நல்லோர்களுக்குத் தீங்கு செய்வானாகில் அவன் தன் குடும்பத்துடன், குலத்துடன் பெரும் துன்பப்படவேண்டும். ஆகையால் இவனை விட்டுவிடுவீராக."

சூதர் சொன்னது: "அப்பொழுது அங்குக் கூடியிருந்த தர்மராஜா யுதிஷ்டிரர், நகுல சகாதேவர்கள், ஸ்ரீவாசுதேவர், சாத்யகி, அர்ஜுனன் ஆகியோர் ஏகமனதாகத் திரௌபதியின் சம்மதம் பெற்றதும், அறிவுக்கு ஒத்ததும், நியாயமானதும் சத்தியமானதுமான வார்த்தைகளைக் கேட்டு மிகவும் மகிழ்ந்தனர். துயரத்திலும் தன் அறிவை இழக்காது அவள் நீதியை உணர்ந்து உரைத்ததுபற்றி மிகவும் பாராட்டினார்கள். ஆனால் பீமனுக்குமட்டும் அது சம்மதமில்லை. கோபாவேசத்துடன் அவன் இந்த வார்த்தைகளைக்கொட்டித் தள்ளினான்: 'இவன் செய்த அடாத குற்றத்துக்கு இவனைக் கொல்லுதல் போதுமான தண்டனை ஆகாது. இந்தத் துஷ்டன், பாபி குற்றமற்ற இளம் பையன்களை ஆழ்ந்து தூங்கிக்கொண்டிருந்தபோது கசாப்புக்கடைக்காரன் போன்று வெட்டி மாய்த்தானே? அதனால் அவனுக்கும் ஒரு பிரயோஜனமும் இல்லை. அவன் தலைவனையும் அவன் திருப்திப்படுத்தவில்லை. இவன் கொலைபாதகன்.' திரௌபதி, பீமன் ஆகிய இருவரின் வார்த்தைகளைக் கேட்டு ஸ்ரீவாசுதேவர் சதுர்புஜத்தோடு கூடிய தமது ஈசுவர வடிவத்தைக் காட்டி அர்ஜுனனிடம் இங்ஙனம் பகர்ந்தருளினார்: "அருமை நண்ப, அர்ஜுனா, பிராம்மணன் கொல்லத் தகுந்தவன் அல்லன். யாராய் இருந்தாலும் எளியவர்களை, நல்லவர்களைக் கொன்றவன் கொல்லப்பட வேண்டியவனே. இரண்டு நியாயங்களையும் நீதி, . சமய சாஸ்திரங்களில் நிர்ணயித்திருக்கிறேன். நீ இந்த இரண்டு நியமனங்களையும் நிறைவேற்றுவாயாக. அதன் மூலம் நீ திரௌபதிக்குக்கொடுத்த வாக்கு நிறைவேறும். வாக்கு பொய் போகக் கூடாது. பீமன், நான், திரௌபதி மூவரும் திருப்தியுறுமாறு செய்வாயாக."

சூதர் சொன்னார்: அர்ஜுனன் ஸ்ரீ வாசுதேவரின் இந்த வார்த்தைகளைக் கேட்டு இங்ஙனம் எண்ணினான். 'கொல்லுதலும் அவன் உயிரைக் காத்தலும் எங்ஙனம் சாத்தியம்?' ஆயினும் பகவானது வாக்கை மெய்யாக்குதல் பொருட்டு அசுவத்தாமன் தலையில் வளர்ந்து வந்த ரத்தினத்தை அர்ஜுனன் துண்டித்துவிட்டான். அசுவத்தாமன் ஏற்கனவே தன் தவறுக்கு மிகவும் நாணமும் துயரமும் அடைந்திருந்தான். இப்போது இந்த ரத்தினத்தை வேறு இழந்ததனால் அவனது தேஜஸ், சிறப்பு எல்லாம் போய்விட்டன. அர்ஜுனன் இங்ஙனம் அசுவத்தாமனை மான பங்கப்படுத்திக் கட்டுக்களை அவிழ்த்துத்தங்கள் பாசறையைவிட்டு விரட்டி ஓட்டினான். பிராம்மணக் குற்றவாளிகளுக்குத் தலையை மழித்தல், சொத்துக்களைப் பறிமுதல் செய்தல், தேசப்பிரஷ்டம் செய்தல் போன்ற தண்டனைகளே சாஸ்திரத்தில் விதிக்கப்பட்டுள்ளன. இவைகளுக்கு உட்பட்டதாகவும் ஸ்ரீ கிருஷ்ணன் வாக்கைக் காப்பதாகவும் ஆன தக்க நடவடிக்கையை இங்ஙனம் செய்தான். இதன் பிறகு பாண்டவர்களும் திரௌபதியும் மிகவும் துக்கித்துத் தங்கள் இறந்த மக்களின் ஈமக்கிரியைகளைச் செய்தார்கள்.

## அத்தியாயம் 8

சூதர் சொன்னார்:- பாண்டவர்கள் யுத்தத்தில் மாண்டுபோன தங்கள் உறவினர்களுக்கு இறுதிக்கடன் — எள்ளும் தண்ணீரும்விடப் புனிதமான கங்கா தீரத்துக்குப் போனார்கள். சாஸ்திர நியமனப்படி பெண்பாலரும் அவர்களைப் பின்பற்றிப் போனார்கள். ஹரியின் திருவடித் தாமரைகளிலிருந்து பிரவகித்து வரும் அத்தகைய கங்கா தீர்த்தத்தில்

அவர்கள் யாவரும் நீராடினார்கள். கண்களி னின்று கண்ணீர் ஆறாகப் பெருக மாளாத் துய ரத்துடன் அவர்கள் தங்கள் மாண்டுபோன உறவினர்களுக்கு நீர் வார்த்தார்கள். மிகவும் அன்பு நிறைந்த உத்தமனான யுதிஷ்டிரன் தன் சகோதரர்களுடன் கூட மிகவும் விசனத்துடன் உட்கார்ந்திருந்தான். திருதராஷ்டிரன், விது ரன், காந்தாரி, குந்தி, திரௌபதி ஆகியோர் தங்கள் மக்களைப் பறிகொடுத்தது குறித்து மிகவும் வேதனைப்பட்டுக்கொண்டிருந்தார்கள். அவர்கள் யாவருக்கும் ஆறுதல் சொல்லும் பொருட்டு இங்ஙனம் இயம்பினார்: "நீங்கள் யாவரும் அழுகையை விடுவீர்களாக. ஆண் டாண்டு அழுதாலும் மாண்டார் மீளுவரோ? பிரளய காலத்தில் அனைத்து ஜீவராசிகளும் மரணமடைகின்றன. மரணத்தைத்தடுக்கவோ மாற்றி அமைக்கவோ யாருக்கும் இயலாது."

முனிவர்களே! துர்க்குணமே வடிவெடுத்த துரியோதனனும் அவன் கெட்ட சகோதரர் களும் தங்கள் தாயாதிகளை வஞ்சித்ததன் வினை வாகவும் அவர்கள் ராஜ்யங்களைப் பாழ்படுத் தியதன் வாயிலாகவும் திரௌபதியை மான பங்கப்படுத்தியதன் வாயிலாகவும் தங்கள் மரணத்தைத் தேடிக் கொண்டார்கள். தீமை ஒருநாளும் வெல்லாது. சத்தியமே வெல்லும் என்பது தெய்வ நீதி. உத்தமன் தர்மராஜன் யுதிஷ்டிரன் இழந்தராஜ்யத்தை மீண்டும் பெற் றான். மறுபடியும் யுதிஷ்டிரன் முடிசூட்டப்பட் டான். அடுத்தடுத்து மூன்று அசுவமேத யாகங் களைஅவர்கள் மிகவும் சிறப்பாகச்செய்து முடித் தார்கள். உலகம் நெஞ்சாரப் புகழத் தர்மராஜா யுதிஷ்டிரன் ராஜ்யபரிபாலனம் பண்ணினார்.

ஸ்ரீ கிருஷ்ண பரமாத்மா பாண்டவர்களுக்கு ஆசிகூறிவிட்டுச் சாத்யகியுடனும் உத்தவ ருடனும் துவாரகைக்குத் திரும்பிப் போக விரும்பினார். அதை அறிந்த துவைபாய னரும் மற்ற முனிவர்களும் ஸ்ரீகிருஷ்ணனை வந்தித்தார்கள். ஸ்ரீ கிருஷ்ணனும் முனிவர்களை வணங்கிக்கௌரவப்படுத்தினார்.ஸ்ரீகிருஷ்ணன் தம் ரதத்தில் ஏறப்போகும் தருணத்தில் அபி மன்யுவின் மனைவி உத்தரைபீதியுடனும் அழுது கொண்டு தம்மை நோக்கி ஓடி வருவதைக் கண்டார். ஸ்ரீ கிருஷ்ணனை வணங்கி அவள் இங்ஙனம் புலம்பினாள். "தேவ தேவா, ஜகத் பதே, என்னைக் காப்பாற்றுங்கள். உங்களைத் தவிர ஜீவர்களுக்கு அபயம் அளிக்க வல்லவர் யார்? யோகேசுவரா, இந்த ஜீவர்கள் எல்லா ரும் அழிவுக்கு உட்பட்டவர்கள். ஒரு திவ்விய அஸ்திரம் கொழுந்தும் ஒளிப்பிழம்புடன் என்னை நோக்கி வருகிறது. தீனபந்தோ, ஆபத்பாந்தவா, என் தலைவனை இழந்த பிறகு எனக்கு இந்த உயிரின் மேல் எந்தப் பற்றும் இல்லை. ஆனால் என் கர்ப்பத்தில் இருக்கும் குழந்தையை அது கொன்றுவிடும் என மிக வும் அஞ்சுகிறேன். அதைக்காப்பது தங்கள் ஒருவருக்கே இயலும். அதைக் காப்பாற்றுங் கள், காப்பாற்றுங்கள்."

சூதர் சொன்னார்: "ரிஷிகளே, உத்தரையின் இவ்வார்த்தைகளைக் கேட்டு பக்தவத்சலன் நடந்ததை அறிந்துகொண்டார். பாண்டவ வம்சத்தை நிர்மூலம் ஆக்குதல் பொருட்டு அசுவத்தாமன் மறுபடியும் பிரம்மாஸ்திரத்தை ஏவியிருக்கிறான். அந்த அஸ்திரம் அவர்கள் உயிரை வாங்கச் சீறிக்கொண்டு வந்தது. வீரர் களான பாண்டவர்கள் அதை எதிர்க்க ஆயத்த மானார்கள். ஆனால் பிரம்மாஸ்திரமோ எதனா லும் சமன்படுத்த முடியாத உயர்ந்த அஸ்திரம். ஆகையால் பக்த ரக்ஷகனான பகவான் பாண்ட வர்களை இந்தப்பேரழிவினின்று காக்கத் தமது சுதர்சனத்தால் பிரம்மாஸ்திரத்தைச் செயலற்ற தாக்கினார். கடவுள் எல்லா ஜீவர்களுள்ளும் அந்தர்யாமியாய் இருக்கிறார். தம் சூக்ஷ்மவடி வுடன் உத்தரையின் கர்ப்பத்தில் பிரவேசித் துக் கதிகலங்கியிருந்த உத்தரையின் குமாரனை ரக்ஷித்தார். கர்ப்பகாலத்தில் தாயின் உணர்ச்சி கள் எல்லாம் குழந்தையின் சுபாவம், குணம், இயல்பை உருவாக்குவதில் பிரதான ஸ்தானம் வகிக்கின்றன. எதிர்காலத்தில் அரசனாகப் போகும் அந்தப் பிண்டத்தைப் பகவான் தம் ஸ்பரிசத்தால் குறையற்றதாக்கினார். மானு டர்க்குச் சாத்தியமாகாத காரணத்தால் இந்தச் சம்பவத்தை எளிதாக, அற்பமானதாகக் கருத வேண்டாம். கடவுளுக்குச் சாத்தியமாகாத விஷயமே இல்லை. அவன் அலகிலா விளையாட் டுடையான். சிருஷ்டி, ஸ்திதி, சம்ஹாரம் அவ னது அருட்கூத்து. அவனது விருப்பத்துக்கு மாறாக இப்பிரபஞ்சத்தில் எதுவுமே நடக்காது. எல்லாம் அவனே. எல்லாம் அவன் செயலே.

# கபீர்தாசர் சரிதம்

(176ஆம் பக்கத் தொடர்ச்சி)

கபீரும் அவர் மனைவி சுந்தராவும், அதிதிகளை உபசரிக்கும் சேவையில் மிகவும் ஈடுபட்டவர்களாய் இல்லறம் என்னும் நல்லறத்தை இனிது நடாத்தி வந்தனர். அவர்களுடைய இல்லற வாழ்வின் பயனாக ஒரு புத்திரனும் பிறந்தான். அப்புத்திரனின் முகம் கமலம் போல் இருந்தமையால் கமால் என்று பெயர் வைத்து வளர்த்து வந்தார்கள். கமாலுக்கு ஏழு வயதானபொழுது அவன் தன் தந்தையிடம் தீர்த்தயாத்திரை செய்துவர அனுமதி கேட்டான்.

கபீர் தன் மைந்தனை எடுத்து மடிமேல் வைத்துக்கொண்டு "இன்னும் விவேகம் வராத குழந்தையாக இருக்கின்றாய். இச்சிறு வயதில் நீ தனியாக எப்படித் தீர்த்த யாத்திரை செய்வாய்? இந்தச் சிறு வயதில் உன்னை எப்படித் தனியாக அனுப்ப முற்படுவோம்? இறைவன் நீக்கமற எங்கும் நிறைந்திருக்கிறார். இருக்கும் இடத்திலேயே அவரைக்கண்டுகளிப்புறாமல் அங்கும் இங்கும் அலைவது எதற்கு? அதனால் யாது பயன்?" என்றார். "தந்தையே, தாங்கள் கூறுவது சத்தியம். ஆயினும் புண்ணியஸ்தலங்களைத் தரிசிப்பது விசேஷம் என்றும், புண்ணிய தீர்த்தங்களில் நீராடுவதால் பாபம் நீங்கும் என்றும், சாதுக்களைத் தரிசனம் செய்வதால் சந்தேகங்கள் அகலும் என்றும், பல இடங்களைச் சென்று பார்ப்பதால் வாழ்க்கை அனுபவம் உண்டாகும் என்றும் பெரியோர்கள் கூறியிருப்பது மெய்ம்மைஆகும். எனவேதான் நான் யாத்திரை செய்யத் தீர்மானித்திருக்கின்றேன்" என்றான் கமால். மகன் கூறியதைக் கேட்ட தந்தை மகிழ்ச்சி அடைந்து "குழந்தாய், நீ யாரையாவது துணைக்கு அழைத்துச்செல்லவேண்டும்" என்றார். "ஸ்ரீராமனும், ராமநாமம் என்கிற வாளும், சத்குணங்கள் என்கின்ற தோழர்களும் எனக்கு யாண்டும் துணையாயிருக்க வேறுதுணை எதற்கு?" என்று கூறித் தந்தையிடமும், தாயிடமும் விடைபெற்றுக்கொண்டு கமால் யாத்திரை புறப்பட்டான்.

கமால் நாட்டைக் கடந்து கங்கா தீரத்தை அடைந்தான். கங்கையைக் கடந்து அக்கரை செல்ல நினைத்த கமால், கங்கையைப்போற்றிப் புகழலானான். "பாகீரதியே, கங்கா பவானியே, மந்தாகினியே, ஸரயுநதியே, ஆகாய கங்கையே, என்னை அக்கரையில் சேர்ப்பாயாக" என்று கூறிக் கங்கையில் இறங்கி நடந்து போனான். கங்கா நதியும் கமாலை அக்கரை போக அனுமதித்தது. கமால் மகிழ்ச்சியுடன் நைனிச்சாரண்யம் முதலிய வனங்களிலும், இமயம் முதலான பர்வதங்களிலும், ஹரித்துவாரம் முதலிய ஸ்தலங்களிலும் யாத்திரை செய்து அங்கு வாதுக்கு வந்தவர்களையெல்லாம் வென்று, அத்வைதத்தைப் பரப்பி வந்தான். யாத்திரையை இனிது முடித்துக்கொண்டு கமால் வீடு சென்று பெற்றோரை வணங்கி நின்றான். மகனைப் பார்த்த பெற்றோர் பெருமகிழ்ச்சி அடைந்தனர். கபீரும், கமாலும், சுந்தராவும், சாதுக்களுக்குப் போதுமான வஸ்துக்களைக் கொடுத்து பகவத் தியானத்திலும், பிரம்ம ஞானத்திலும் திளைத்திருந்தார்கள்.

தந்தையைப் போன்று கமாலும் பக்தியை நாடெங்கும் பரப்பி வந்தான். அவன் பேச்சையும், நடத்தையையும், பண்பையும் நேரில் பார்த்த மக்கள், அவனால் கவர்ந்து இழுக்கப்பட்டார்கள். கூட்டம், கூட்டமாக அவனைச் சென்று தரிசிக்க ஆரம்பித்தனர். தீராத நோயினால் வருந்திய வர்த்தகன் ஒருவன், கமாலைத் தரிசித்து வந்தவர்களைப் பார்த்துக் கூறியதாவது: "மக்களே, கமால் என்பவன் ஓர் அறியாக் குழந்தை. அவனிடம் என்ன மகிமை இருக்கின்றது? ஓர் எறும்பின் பின் பல எறும்புகள் சாரை சாரையாகச் செல்வது போன்று கூட்டம் கூட்டமாக அவனிடம் போய் வருகிறீர்கள். அவனிடம் போனதால் உங்களிடம் உள்ள குறை ஏதாவது நீங்கிற்றா? உங்களுக்கு ஏதாவது மனச்சாந்தி கிட்டியதா?" அதற்கு மக்கள் கூறியதாவது: "கற்பகத் தருவைச் சார்ந்த காகமும் அமிர்தம் உண்ணும் என்னும் பழமொழிக்கேற்ப கமாலைத் தரிசித்த பின் குறை நீங்காதவர்களும் உண்டோ?" என்றார்கள். அதனைக் கேட்ட அவ்வர்த்தகன் கமாலைத் தரிசிப்பதற்குச் சென்றான். கமாலைத்

தரிசித்ததும் அவனிடத்தில் உள்ள நோய் நீங்கியது. அவன் மிக்க மகிழ்ச்சி அடைந்தவனாகக் கமாலைத் தன்வீட்டிற்கு வரவேண்டும் என்று வேண்டிக்கொண்டான். கமாலும் அவன் அன்பு அழைப்பை ஏற்றுக்கொண்டு, அவன் வீட்டிற்குச் சென்றான். அவ்வணிகன் தன்னிடம் இருந்த விலை உயர்ந்த நவரத்தினக் கல் ஒன்றைக் கமாலுக்குத் தெரியாமல் அவன் துணியில் முடிந்துவிட்டான். கமால் அவனிடம் விடை பெற்றுக்கொண்டு தன் வீட்டிற்குச் சென்றான். கமால் துணியில் முடிச்சிருப்பதை அவன் தந்தை கபீர் பார்த்தார். அம்முடிச்சை அவிழ்த்தபொழுது நவரத்தினக்கல் ஒன்று அதில் இருப்பதைப் பார்த்தார். "இது யார் தந்தது?" என்று கபீர் கமாலைக் கேட்டார். கமாலுக்கு அது எப்படித் துணியில் வந்தது என்று தெரியவில்லை. கபீர் தம் மகனை அழைத்துக்கொண்டு வர்த்தகனுடைய வீட்டிற்கு ஓடினார். "இந்த நவரத்தினக்கல் என் மகன் கமால் துணியில் இருந்தது. இதைப்பற்றிய விபரம் உங்களுக்குத் தெரியுமா?" என்று கேட்டார். அவ்வர்த்தகன் பகர்ந்ததாவது: "நான்தான் அந்த ரத்தினக்கல்லை அவருக்குத் தந்தேன். அதை நேரிடையாகத் தந்தால் ஒருவேளை அவர் மறுத்துவிடுவார் என்று எண்ணி அவருக்குத் தெரியாமல் அவருடைய துணியில் முடிந்து அனுப்பினேன். தயவு செய்து நீங்கள் அதை ஏற்றுக்கொள்ளவேண்டும்." கபீர் பகர்ந்ததாவது: "பணமானது ஆட்கொல்லி ஆகும். பணத்தின் மீது ஆசை வைத்தால் பக்தி போய்விடும். எங்களுக்குப் பக்திதான் முக்கியம். எனவே அதை நீங்கள் எடுத்துக் கொண்டு உங்களுடைய அன்பை மட்டும் எங்களுக்குக் கொடுத்தால் போதும்" என்றார்.

"அந்த ரத்தினக்கல்லைத் தருவதன் மூலம் அன்பை வெளிப்படுத்த விரும்புகிறேன். தாங்கள் அதை எடுத்துச் சென்று நல்ல காரியத்துக்குப் பயன்படுத்துங்கள். தங்களைப் போன்றவர்களிடம் பொருள் இருந்தால் அது ஈசுவர காரியத்துக்கு நன்கு பயன்படும். எனவே தாங்கள் மறுக்காமல் அதை எடுத்துச்செல்லவேண்டும்" என்றான் வணிகன். அவ்வணிகன் ரத்தினக்கல்லை எடுத்துக்கொள்ள அறவே மறுத்ததனாலும் அவனுடைய விருப்பத்தை நிறைவேற்றக் கபீர் விரும்பியதாலும் அதைத் தம் வீட்டிற்கு எடுத்துச் சென்றார். அன்றிரவு நூறு சாதுக்கள் அவருடைய வீட்டிற்கு விருந்தினராக வந்தார்கள். கபீர் வீட்டில் அந்த நவரத்தினக் கல்லைத்தவிர வேறு பொருள் அன்றைக்கு எதுவுமில்லை. பகவானுடையபெருமையை எண்ணி யெண்ணி கபீர்வியப்படைந்தார். பக்தன் வீட்டிற்கு எழுந்தருளும் முன்பு அதற்கு வேண்டிய பொருளையும் தந்து, பகவான் எழுந்தருள்கின்றார் என்று கபீர் மட்டற்ற மகிழ்ச்சி அடைந்தார். உடனே அந்தக் கல்லை ரத்தின வியாபாரியிடம் கொண்டு சென்று விற்றுப் பணமாக்கினர். அப்பணத்தைக்கொண்டு தாயும் தந்தையும் சேயும் நூறு சாதுக்களுக்கு விருந்துவைத்து மகிழ்ச்சி அடைந்தார்கள். மீதியுள்ள தொகையைக் கொண்டு அவ்வூரில் வாழ்ந்துவந்த உழைப்பும் பக்தியும் படைத்திருந்த பத்து ஏழைக் குடும்பங்களுக்கு வீடுகள் கட்டித்தந்து, உடைகள் வாங்கிக்கொடுத்து மகிழ்ச்சி அடைந்தார். அம்மக்களுக்குச் செய்த சேவையைத் தாம் வழிபடு தெய்வம் தமக்குக் கொடுத்த பணியாக உணர்ந்தார். அந்த நவரத்தினக்கல்லை வணிகன் மூலமாகத் தம் வழிபடு தெய்வமே தமக்குக் கொடுத்ததாக உணர்ந்தார். பிறகு வழிபடு தெய்வமே அந்தப் பொருளை மேற்குறித்த பணிகளுக்குச் செலவு செய்யும்படி தூண்டியதாகவும் உணர்ந்தார். கபீர் முற்றும் தம் உள்ளத்தைத் தம் இஷ்டதெய்வத்திடம் ஒப்படைத்து இருந்தார். அவருடைய உள்ளத்தில் எழுந்த எண்ணங்களை எல்லாம் தம் இஷ்ட தெய்வத்தின் சித்தம் என உணர்ந்தார்: ஈசுவரனிடம்முழுதும் உள்ளத்தை ஒப்படைத்து விட்டால் அவ்வுள்ளத்தில் எழுகிற எண்ணங்கள் எல்லாம் ஈசுவரனுடைய சித்தமாகின்றன என்பதற்குக்கபீர்சான்றாக விளங்கினர்.கபீரும், அவர் மனைவி சுந்தராவும், அவருடைய மகன் கமாலும் சாதுக்கள் சேவையிலும், மக்கள் பணிவிடையிலும், ஈசுவரபக்தியிலும் ஈடுபட்டுப் பரமானந்தமாக வாழ்ந்து வந்தார்கள். அவர்களை வந்தடைந்த மக்களுக்கும் ஆனந்தத்தை ஊட்டி 'இன்பமே எந்நாளும் துன்பமில்லை' என்னும் கோட்பாட்டின்படி வாழ்ந்து இறுதியில் இறைவனடியைச் சேர்ந்தார்கள். (முற்றும்)

# குட்டித் திருவாசகம்

(வித்துவான் ஆதி. பாலசுந்தரன் M. A.)

'சிவனே!' என்று லிங்கத்தை அபயமாகக் கட்டிப் பிடித்துக் கொண்டதற்கு மார்க்கண்டேயன்மீது இரக்கமும் கருணையும்கொண்டு கூற்றுவனை அழித்தார் சிவபெருமான்.

காட்டில் குகையில் பூதத்தால் அடைபட்டுக் கஷ்டப்படும்போது, நக்கீரர் முருகன் திரு நாமத்தைச் சொல்ல, நக்கீரருக்கு நன்மை விளைந்தது.

"பண்டை வினையின் பற்று அறுத்தேன் சிவனே" என்று உனது திருநாமத்தை இடையருது ஓதினேன். என்னுடைய பழையவினையாகிய சஞ்சித வினையெல்லாம் என்னைவிட்டு நீங்கின.

சஞ்சிதவினை, பழையவினை, பழவினை, முன்வினை எல்லாம் ஒன்றே. முன்வினை இகிதம் என்றும், அகிதம் என்றும் இரண்டு வகைப்படும்.

இகிதம் என்ருல் என்ன? மனம், வாக்கு, காயம் ஆகிய மூன்ருலும் உயிருக்கு உறுதி தருவனவற்றைச் செய்வது இகிதம் எனப்படும்.

அகிதம் என்ருல் என்ன? மனம், வாக்கு, காயம் ஆகிய மூன்ருலும் உயிருக்கு உறுதி தராதனவற்றைச் செய்வது அகிதம் எனப்படும். எங்கும் நிறைந்து, நித்தமாய் வியாபித்து இலங்குபவன் இறைவன். ஆத்மாக்கள் எனச் சொல்லப்படுகின்ற உயிர்களிடத்திலே மிகவும் கருணை கொண்டவன் அவன். ஆத்மாக்கள் அந்தகாரப் பெருவெளியில், இருள் வெளியில் அலைந்துகொண்டிருப்பதைக் கண்டு மனம் இரங்குபவன் இறைவன். தர்மம் மிகுந்த இகிதத்தைச் செய்யும் ஆத்மாக்களுக்கு அனுக்கிரஹமான இன்பத்தை நல்குவான் அவ் இறைவன்.

மனம், வாக்கு, காயம் ஆகிய மூன்ருலும் உயிர்க்கு உறுதி தரும் செய்கை எது? இந்த மூன்ருலும், இறைவனைக் குறித்துச் செய்யப்படும் செயல்களைக் காட்டிலும் சிறந்த வேறு செயல்கள் உண்டா? ஒன்றும் இல்லை.

"படித்தேன் உனது திருநாமம்; பண்டை வினையின் பற்று அறுத்தேன்" என்கிருர் அதிவீர ராம பாண்டியர். மனத்தால் சிவபெருமானை எண்ணிஞர். வாக்கினுலே அவனுடைய ஆயிரம் திருநாமங்களை உச்சாடனம் செய்தார். காயத்தினுலே, ஆக்கையால் பெற்ற பயனை அடைவதற்கு அரனுர் திருக்கோயில் சென்று வலம் வந்து பணிந்து போற்றினுர். எனவே, அவருடைய பழைய வினைகளின் பாசத்தை அவரால் வேரறுக்க முடிந்தது.

இறைவனுடைய சிந்தனை இருப்பவர்களுக்கு எல்லாம் பழைய வினைகள் விட்டு விலகிப் போய் விடும் என்பது உண்மையன்ருே?

"பிடித்தேன் பிறவிக் கடல்நீந்தப் பெரிய புணையா உனது அடியை"- பிறவியாகிய கடலை நீந்திக் கடப்பதற்குப் பெரிய தெப்பமாக உன் திருவடிகளைப் பற்றிக்கொண்டேன் என்கிருர்.

செய்த, செய்கின்ற, செய்யும் வினைகளுக்கு ஏற்ப, எண்ணிக்கையில் அடங்காமல் பிறவி வந்து வாய்க்கிறது. அளவிடமுடியாத பொருளைப் பற்றிச் சொல்லும்போது, கடலை உபமானமாகச் சொல்வது உண்டு. பிறவிக்குக் கடலை உபமானமாகக் கூறுவார்கள்.

கடலை நீந்திக் கடப்பதற்குத் தெப்பம் உற்ற துணையாக அமைகிறது. அதுபோன்று, பிறவியாகிய பெரிய கடலைக் கடந்து செல்வதற்குத் தெப்பமாக வந்து வாய்ப்பது எது? இறைவனுடைய திருப்பாதங்களே தெப்பமாக வந்து அமைகின்றன. இறைவன் திருவடிகளைக் காட்டிலும் வேறு தெப்பம் இல்லை. ஆகவே, இறைவனுடைய திருவடிகளைச் சிக்கெனப் பற்றிக்கொண்டார். அதிவீ ;ராமருக்குப் பழைய வினைகள் எல்லாம் அகன்றுவிட்டன. அடுத்து, சிவனேடு ஐக்கியமாதல் பொருட்டு, அவனுடைய பாதங்களைப் பற்றுகிருர். ஏன்?

ஒன்றை விடுத்தார்; மற்ருென்றைப் பற்றுகிருர். ஏன்?

ஏதாவது ஒன்றுடன் ஆத்மா சேர்ந்து இணைந்தே நிற்கும். தனித்து நிற்கும் ஆற்றல் ஆத்மாவுக்குக் கிடையாது என்று இலக்கணம் சொல்வார்கள்.

பாசத்தோடு இணைந்து நிற்கும்; அல்லது பதியாகிய இறைவனேடு சார்ந்து நிற்கும்.

அதிவீரராமரின் ஆத்மா முதலில் பாசத்தோடு சார்ந்து இருந்தது. "பண்டை வினையின் பற்று அறுத்தேன்" என்று அவரே கூறியபடி, அந்த ஆத்மாவின் பாசவினைகள் எல்லாம் அகன்றன. பாசத்தைப் பற்றியிருந்த ஆத்மா பாசத்தை விட்டபின் மற்றொன்றைப் பற்றிக் கொள்ள வேண்டுமல்லவா? எனவே, "பெரிய புணையா உனது அடியை ... ... பிடித்தேன்" என்று சொல்லி இறைவனுடைய பாதங்களைப் பற்றிக்கொண்டார்.

"பற்றுக பற்றுஅற்றான் பற்றினை அப்பற்றைப்
பற்றுக பற்று விடற்கு"

என்பது அனுபவ இலக்கணம். நம்மிடத்தில் உள்ள பற்றை அறவே விட்டொழிப்பதற்கு எவ்விதப் பற்றும் விருப்பும் வெறுப்பும் இல்லாத இறைவனைப் பற்றுக என்பது ஒரு பற்றை விடுவதற்கு இன்னொரு பற்றைப் பற்றிக்கொள்ள வேண்டும் என்று சொன்ன உபாயம் ஆகும்.

இறைவனுடைய பாதங்களைத் தெப்பமாகப் பற்றிக்கொண்டால் பிறவிக் கடலை நீந்திவிட முடியுமா? இறைவனுடைய திருவடிகளாகிய தெப்பம் பிறவிக் கடலைக் கடப்பதற்கு உதவி செய்யுமா?

நிச்சயம் உதவி செய்யும். இறைவன் திருவடித் துணையாய், பிறவிப் பெருங்கடலைக் கடந்து, இறவாப் பிறவாப் பேரின்ப நிலையை அடையலாம்.

"பிறவிப் பெருங்கடல் நீந்துவர் நீந்தார்
இறைவன் அடிசேரா தார்."

இறைவன் திருவடிகளை இடையறாது தியானிப்பவர்கள் பிறவியாகிய பெருங்கடலை நீந்திக் கடந்து, பிறவாப் பேரின்ப நிலையை அடைவார்கள்.

"முடித்தேன் உள்ளத்து எண்ணமெல்லாம்" என்கிறார். ஏன்? எம்பெருமான் திருவடிகளாகிய புணையைப்பற்றிக் கொண்டேன். என்னுடைய சஞ்சித வினைகளையெல்லாம் போக்கிக்கொண்டேன். பழைய வினைகள் அழியுமாறு, எம்பெருமான் திருவடிகளைப் பற்றிப் பிறவிக் கடலைக் கடக்க எண்ணினேன். நான், எனது உள்ளத்தில் நினைத்தவற்றையெல்லாம் முடித்துவிட்டேன் என்று புளகாங்கிதம் அடைகிறார்.

எம்பெருமான் துணை இருந்தது; எண்ணத் திண்ணம் உடையவராக இருந்தார் அதிவீரராமர். எனவே, கருதியதை முடித்தார்.

அதிவீரராம பாண்டியர் இந்தப் பாடலில் என்ன சொல்கிறார்?

பொய்யான சரீரம் எடுத்து, நல்ல காரியம் செய்பவனைப் போல நடந்து, நல்ல வாழ்நாட்களை வீண் நாட்கள் ஆக்கிவிட்டேன். இதை உணர்ந்து இறைவனுடைய திருநாமத்தை இடைவிடாது ஜபித்தேன்; அதன் காரணமாக என் பழைய வினைகள் எல்லாம் அழிந்தன. பிறவிக் கடலைக் கடப்பதற்கு எம்பெருமானின் பாதங்களைத் தெப்பமாகப் பற்றிக் கொண்டேன். என் எண்ணம் எல்லாம் நிறைவேறிவிட்டது என்கிறார்.

இப்பாடலின் மூலம் ஊகித்து அறியக்கூடியது என்ன? உலக வாழ்க்கையை வெறுத்தார். உலகத்தில் யாரையும் நம்பவில்லை; விரும்பவில்லை. பிறவியை ஒழிக்க எண்ணினார். எல்லாம் பரம்பொருளே என்னும் ஞானம் அவருக்கு வந்து வாய்த்தது. இறைவனை அறிந்துகொண்டார். இறைவனுடைய தொடர்பு கிடைத்தது.

இந்த இடத்தில் வேதக் கருத்து ஒன்றை நினைவிலே கொள்ளத் தக்கது பொருத்தமாகும். "தஸ்ய பிதா அபிதா பவதி, மாதா அமாதா, தேவா, அதேவா: வேதா அவேதா:"

யார் இறைவனை அறிந்தானோ அவனுக்குத் தாயும் தாயல்லள்; தந்தையும் தந்தையல்லன்; தெய்வமும் தெய்வம் அன்று; வேதமும் வேதம் அன்று; எல்லாம் பரம்பொருளே.

சான்றோர்களுக்குச் சான்றோர்களின் கருத்துக்கள் அவர்களை அறியாமலே வந்து உதவுகின்றன.

"முன்னைப் பிறவித் தவப்பயனோ!
முழுதும் அறியா மூடன் இவன்
என்னக் கருத்தில் எண்ணியோ!
யாதோ அறியேன், இரவுபகல்
கன்னல் பாகில் கோல்தேனில்
கனியில் கனிந்த கவிபாட
அன்னத் தொகுதி வயல்கருவை
ஆண்டான் என்னை ஆண்டதுவே."

அன்னப் பறவைகள் கூட்டமாகச் சூழ்ந்து வசிக்கும் வயல் சூழ்ந்த திருக்கருவை எம்பெரு

மான் என்னை அடிமையாக்கிக்கொண்டான்.

இரவு பகல் எந்நேரமும் கருப்புச் சாற்றின் பாகைப் போலவும், கொம்புத் தேனைப் போலவும், முக்கனியைப் போலவும் கனிவான பாடல்களை நான் பாடக் கேட்டு என்னை அடிமையாக்கிக்கொண்டான். இது, நான் செய்த முற்பிறவித் தவப்பயனா? ஒன்றும் அறியாத மூடன், இவன் ஐயோ! பாவம் என்று என்மீது மனத்திலே இரக்கம் கொண்டா? என்ன காரணமோ அறியேன்!

அன்னப் பறவைகள் சூழ்ந்து வசிக்கும்படியான வளம் நிறைந்த வயல்கள் சூழ்ந்தது கரிவலம் வந்த நல்லூர் என்னும் ஸ்தலம்.

இரவும் பகலும் எந்த நேரமும் நான் இறைவனை மனத்திலே நினைத்து இருத்திப் பாடினேன் என்கிறார். இறைவனை நினைப்பதற்கு என்று தனியாக நேரம் எதுவும் இல்லை. தனியாக நாள் எதுவும் கிடையாது. எப்பொழுதும் எந்த நொடிப்பொழுதும் இடைவிடாது உள்ளத்தில் எண்ணித் தியானம் செய்து கொண்டே இருக்கலாம்.

பகுத்தறிவைப் பெற்ற மானுடப் பிறவியின் நோக்கம் அதுதான். உயர்ந்த பரம்பொருளாகிய இறைவனை நினைத்துத் தியானிப்பதைக் காட்டிலும் வேறு நன்மைதருவது எதுவும் இல்லை.

கவி பாடி எம்பெருமானைப் போற்றுகின்றார். ஏகாக்ர சித்தம் என்னும் ஒருமைப் பாட்டு உணர்வு இருந்தால்தான் பாட்டு வரும். அதிவீரராமபாண்டியரின் சிந்தனை எப்போதும் சிவனையே சார்ந்திருந்தது. சித்தத்தைச் சிவன்பால் சேர்த்த சிவனடியாராக விளங்கியவர் அவர்.

கன்னல் என்றால் கரும்பு. கரும்பின் பாகைப் போன்ற கவிபாடினார். கரும்பில் இருந்து எடுக்கப்படுவது சாறு. சாற்றைக் காய்ச்சித் தயாரிக்கப்படுவது பாகு. அதுபோன்று, ஆராய்ச்சியால் வந்து சேர்ந்த அறிவைக்கொண்டு பாடிய பாடல்கள் கரும்பின் பாகு போன்று அமைந்த பாடல்கள். அப்படிப்பட்ட பாடல்களால் திருக்கருவைப் பெருமானைப் பாடினார்.

ஆராய்ச்சியால் வந்த அறிவு. எத்தகைய ஆராய்ச்சி? எதைப் பற்றிய ஆராய்ச்சி? நல்லது எது? தீயது எது? நல்லதன் நன்மையையும், தீயதன் தீமையையும் பிரித்துக் காண்கின்ற அறிவு. எதைப் பற்றிய ஆராய்ச்சி? உண்மையைப் பற்றிய ஆராய்ச்சி. பரம்பொருளைப் பற்றிய ஆராய்ச்சி, உலகத்தில் இருக்கின்ற பொருள்கள் எல்லாம் நிலையற்றவை; அழியக் கூடியவை. இப்பிரபஞ்சத்தில் என்றும் அழியாமல் நிலைத்திருக்கும் உண்மைப் பொருள் பரம்பொருள் ஒன்றே. இத்தகைய உண்மையை உணர்ந்து பாடியவர் அதிவீர ராம பாண்டியர்.

அறிவு உயிருக்கு உரிய இயல்பான குணம். அறிவாகிய குணத்தை இயல்பாகப் பெற்றுள்ள உயிர், பரம்பொருளைப் பற்றிச் சிந்தனை செலுத்துவது இயல்பே ஆகும்.

"கோல் தேன் கவி" என்கிறார். கோல்—மரக்கிளை. மரக்கிளைகள் தோறும் மலர்ந்துள்ள மலர்கள் தோறும் சென்று திரட்டி வைக்கக் கூடிய தேன்.

அதுபோல, பல நூல்களையும் கற்றும் கேட்டும் பெற்ற அறிவு. சிறப்பு மிக்க உயிர்களுக்குக் கண் போன்று விளங்குவது கல்வி. அறம், பொருள், இன்பம், வீடு ஆகிய நான்கு உறுதிப் பொருள்களின் திறன் அறிந்து உரைப்பது கல்வி. அத்தகைய கல்வியைப் பல நூல்களையும் கற்றுப் பெற்றவர் அதிவீர ராம பாண்டியர்.

பல அறிவு நூல்களைக் கற்றதுடன் அமையாது, கற்றறிந்த வல்லார் இடத்துக் கேட்டும் தம்முடைய ஞானத்தைப் பெருக்கிக்கொண்டவர் அவர். நன்மை தருகின்ற உறுதிப்பொருள்களை நுட்பமாக ஆராய்ந்து கற்றதுடன் நிறுத்திக் கொள்ளாமல், அதற்கு மேலும் அறிவு மிக்க சான்றோர், பெருமக்களிடத்துப் பாடம் கேட்டு உண்மையையும், உறுதிப் பொருள்களையும் உணர்ந்தவர் அவர். கல்வி, கேள்விகளினால் பெற்ற உண்மையான அறிவைப் பெற்றவர் அவர்.

"கனியில் கனிந்த கவி" – கனி போன்று கனிந்த கவி. பூவாகிப் பிஞ்சாகிக் காயாகிக் காலம் வாய்க்கின்ற சமயத்தில் கனிந்து கனியாவது கனியினுடைய இயல்பு.

அந்தக் கனியைப்போல, அனுபவ முதிர்ச்சியினால் பெற்ற அறிவினை உடையவர் அதிவீர ராமர். கற்றல், கேட்டல் இந்த இரண்டும்

அனுபவத்திலே வருகின்றபோது, மிகவும் உறுதி உடையனவாக அமைகின்றன. அனுபவம் தான் கல்வியின் பயன்.

காமம், வெகுளி, கடும் பற்றுள்ளம், மானம், உவகை, மதம் என்று சொல்லக்கூடிய ஆறினையும் வடமொழியில் பகைவர்க்கம் என்று சொல்வார்கள். இந்த ஆறுவகையான குற்றங்களையும் தன்னிடம் இருக்காதபடி பார்த்துக் கொள்வதற்குக் கல்வியறிவு மிகவும் உதவி செய்கிறது.

ஆக, ஆராய்ந்து கற்றஅறிவு, பலநூல்களையும் கற்றதனால் பெற்ற அறிவு, காலம் வரும்போது கனிந்து முதிர்ந்த அனுபவஅறிவு இம்மூன்றினாலும் நான், திருக்கருவையில் எழுந்தருளியுள்ள சிவபெருமானை நினைத்துப் பாடினேன்; அப்பெருமான் என்னை ஆண்டு கொண்டான் என்கிறார்.

இப்படி இறைவன் என்னை அடிமை ஆளாக ஆண்டு கொண்டானே, இதற்கு என்ன காரணம் என்று யோசித்துப் பார்க்கிறார். இந்தக் காரணங்களாக இருக்கலாமோ என்று யூகித்துச் சொல்கிறார்.

"முன்னைப் பிறவித் தவப்பயனே!" — நான் முற்பிறவியில் செய்த அருந்தவத்தின் புண்ணியப் பயனே! அந்தப் புண்ணியத்தின் நல்வினைவாக என்னை அடிமையாக ஏற்றுக்கொண்டானே! அல்லது அ உ என்பது அறியாத, சிறிதும் அறிவற்ற, கடைப்பட்ட மூடன் இவன்; ஆகவே இத்தகையவனுக்கு அருள் செய்வோம் என்று திருவுள்ளத்தில் எண்ணி ஆட்கொண்டானே?

இவ்வாறெல்லாம் யூகித்துப் பார்க்கிறார்; இறைவன் ஆட்கொண்டதைச் சிந்தனைசெய்து பார்க்கிறார் அதிவீரராம பாண்டியர்.

இப்பிறவியில் யான் அறியத் தவம் ஏதும் இயற்றினேன் அல்லேன். ஒருவேளை முற்பிறவியில் யான் தவம் செய்து, அதன் காரணமாக, இப்பிறவியில் உன் திருவடித் தாமரைகளில் எனக்கு அடைக்கலம் கொடுத்தாயா? முக்திப் பேறு, செய்த தவத்தின் பயனாக வருவது அன்றோ!

கவிபாடும் திறன் கல்வியறிவால் கிட்டுவதாகும். முற்பிறவியில் அல்லது முன்னைப் பிறவிகளில் கிடைத்த கல்வியின் பயனாக இப்பிறவியில் கவிபாடும் ஆற்றல் அவருக்கு வந்து வாய்த்திருக்கிறது. கல்வி எழுமையும் ஏமாப்பு உடைத்து அன்றோ!

இறைவா! என்னை ஆட்கொண்டாயே! அதற்குக் காரணம், நான் முற்பிறவியில்செய்த தவமா? அல்லது முழுமூடன் இவன் என்று இரக்க குணம்கொண்டு அருள் சுரந்தாயா?

இறைவனின் திருக்கருணைப் பெருவெள்ளம் இப்பாடலில் புலனாகிறது.

"ஆண்ட குரவன் ஆவானை
அல்லல் பிறவி அறுப்பானை
வேண்டும் பதவி தருவானை
வெளிவீட்டு இன்பம் அளிப்பானைத்
தூண்டல் செய்யா மணிவிளக்கைத்
தொழில் மூன்று இயற்றும் தொல்லோனைக்
காண்டற்கு அரிய பேர்ஒளியைக்
களாவின் நிழற்கீழ்க் கண்டேனே."

அருள்பாலித்து என்னை அடிமையாக்கிக் கொண்ட ஞான ஆச்சாரியனாக உள்ளவனை, இன்னல் தருகின்ற பிறவித் தளையை வேருடன் அறுப்பவனை, அடியார்கள் விரும்புகிற பதவிகளைத் தருகின்றவனை, மோட்ச இன்பத்தைத் தருகின்றவனை, தூண்டாத மாணிக்க தீபத்தை, முத்தொழிலையும் செய்யும் பழைமையானவனை, காண்பதற்கு அரிய பெரிய ஒளிப்பிழம்பாக உள்ளவனை, களா மர நிழலின் கீழே கண்டு நான் தரிசித்தேன் என்கிறார்.

"ஆண்ட குரவன் ஆவானை"—அருள் கண்ணால் என்னை ஆண்டு அடிமையாகக்கொண்டஞானாச்சாரியனாக விளங்குபவனை — சிவபெருமானை.

மானுடப் பிறவி எடுத்ததன் நோக்கமே இறைவனை அடைவது ஆகும். மனித உடம்போ, பறவைகளின் உடம்போ, விலங்குகளின் உடம்போ இவ்வாறு இயங்குதிணை உயிர்ப் பிறவியாக அமைந்தாலும் சரி, அல்லது மரம் செடி கொடிபோன்ற நிலைத்திணை உயிர்ப் பிறவியாக அமைந்தாலும் சரி, உயிர்களின் பொதுவான நோக்கம் இறைவனை அடைவதே ஆகும்.

ஆனால், பகுத்தறிவு இல்லாத விலங்குகள், பறவைகள், மரம் செடி கொடிகள் ஆகியவற்றிற்கு வீடு பெற வேண்டும் என்னும் உணர்வை உண்டாக்கும் ஞானம் பெறும் தகுதி இல்லை.

# விவேகானந்தரின் சிந்தனைகள்

( திருச்சி வானொலி நிலையத்தில் 18—1—83 அன்று ஸ்ரீமத் ஸ்வாமி நித்தியானந்தர் அவர்கள் நிகழ்த்திய உரை )

**கடமை**

உடலமைப்பில் உறுப்புக்கள் பல இருக்கின்றன. ஒவ்வோர் உறுப்புக்கும் அதற்கேற்ற கடமை உண்டு. கண் பார்த்தல் என்னும் கடமையைச் செய்கிறது; காது கேட்டல் என்னும் கடமையைச் செய்கிறது; கை எடுத்தல், கொடுத்தல், எழுதுதல் முதலிய கடமைகளைச் செய்கிறது. கால் நடக்கின்ற செயலைச் செய்கிறது. ஹிருதயம் ரத்தத்தைப் பல பாகங்களுக்கும் அனுப்புகின்ற செயலைச் செய்கிறது. இங்ஙனம் உடலில் அமைந்துள்ள உறுப்புக்கள் அவைகளுக்கு அமைந்துள்ள கடமைகளை ஒழுங்காகச் செய்யும்பொழுதுதான் உடல் வாழ்வு ஒழுங்காக நடைபெறும்.

இனி, தனிப்பட்ட மனிதன் தன் வாழ்வில் சில கடமைகளைச் செய்தாக வேண்டும். அப்பொழுதுதான் அவன் வாழ்க்கையை ஒழுங்காக வாழ்ந்தவன் ஆகின்றான். குழந்தைப் பருவத்தில் வாழ்க்கை துவங்குகிறது. கல்வி கற்பதும், பெற்றோர்களுக்கும், ஆசிரியருக்கும் பணிவிடை செய்வதும் குழந்தைகளுடைய கடமை ஆகின்றது. அடுத்து வாழ்க்கையில் மணம்புரிந்துகொண்டு இல்லறம் நடத்துகின்ற கட்டம் வருகிறது. 'இல்லறமல்லது நல்லறமன்று' என்பது கோட்பாடு. இல்லறத்தான் சில கடமைகளைச் செய்தாக வேண்டும். அவனுக்குரிய கடமைகளை முறையாகச் செய்யும்பொழுதுதான் அவன் இல்லறத்தை நல்லறமாக நிகழ்த்தமுடியும். இல்லறத்தானுக்குரிய கடமைகள் யாவை என்பதை விவேகானந்தர் கூறியுள்ளார். அவற்றை ஆராய்வோம்.

இல்லறத்தான் முதலில் பொருள் ஈட்டக் கற்றுக்கொள்ளுதல் வேண்டும். பொருளை நேர்மையான முறையில் ஈட்டவேண்டும். பொய்பேசியோ, பிறரை மோசடி செய்தோ, கொள்ளை அடித்தோ பொருள் ஈட்டுதல் கூடாது.

பெற்றோர்களைக் கண்கண்ட தெய்வங்களாக பாவித்து அவர்களை எல்லா விதங்களிலும் மகிழ்விக்க வேண்டும். தாயையும் தந்தையையும் மகிழ்விக்கின்ற குடும்பஸ்தன் தெய்வத்தை மகிழ்விக்கின்றவன் ஆகின்றான். பெற்றோர்கள் முன்னிலையில் பொருந்தாத வார்த்தைகளைப் பேசக்கூடாது. அவர்கள் அமரச்சொன்னால் தான் அமரவேண்டும். அவர்கள் முன்னிலையில் வேடிக்கை விநோதமாகப் பேசக்கூடாது. பரபரப்பும் கோபமும் உடையவர்களாக அவர்கள் முன்னிலையில் நடந்துகொள்ளக்கூடாது. பெற்றோர்களை நாள்தோறும் பாதம் தொட்டு வணங்கவேண்டும்.

குடும்பஸ்தன் ஒருவன் பெற்றோர்கள், குழந்தைகள், மனைவி, ஏழை எளியவர்கள் ஆகியவர்களுக்கு உணவு படைத்த பின்புதான் தான் உண்ணவேண்டும். பெற்றோர்களுக்குப் பணிவிடை செய்வதற்கு ஒருவன் எத்தகைய சரீரத் துன்பத்தையும் ஏற்றுக்கொள்ளத் தயாராக இருக்க வேண்டும்.

மனைவி கணவனைத் தெய்வமாக வைத்து வழிபடவேண்டும். மனைவிக்குக் கணவன் செய்யவேண்டிய கடமைகள் இருக்கின்றன. மனைவியை எக்காரணத்தைக் கொண்டும் பொருந்தாத வார்த்தைகள் கூறித் திட்டக்கூடாது. தாயைத் தெய்வமாக வைத்து வழிபடுவது போன்று மனைவியையும் தெய்வமாக வைத்துப் போற்றவேண்டும். தனக்கு எத்தகைய கஷ்ட நஷ்டங்கள் வந்தாலும் மனைவியினிடத்தில் அவற்றைக் காட்டிக்கொள்ளக் கூடாது. மனைவியினுடைய விருப்பத்தைக் கணவன் நிறைவேற்றி வைக்க வேண்டும். மனைவியின் மனம் நோகும்படி கணவன் நடந்துகொள்ளக்கூடாது. கற்புடைய மனைவியின் தூய அன்பைப் பெறுகின்றவன் வாழ்க்கையில் முன்னேறுவான்.

இனி, தன் மக்களைப் பராமரிப்பதிலும் இல்லறத்தான் கண்ணும் கருத்துமாக இருக்க வேண்டும். நான்கு வயது வரையிலும் குழந்தைகளை அன்புடன் வளர்க்கவேண்டும். பதினாறு வயது வரையிலும் அவர்களுக்குப் பண்புடைய கல்வி தர ஏற்பாடு செய்யவேண்டும். இருபது வயது ஆகும்பொழுது அவர்களை ஒரு தொழிலில் ஈடுபடுத்தவேண்டும். இருபது வயது ஆன ஆண் மகனைத் தனக்குச் சமமாகப்

பாவித்து அன்புடன் நடாத்தவேண்டும். பெண்களையும் அதே முறையில் வளர்த்துத் தக்க பருவம் வந்ததும் நல்ல வரனுக்கு மணம் முடித்துத் தரவேண்டும். நகை, பொருள் முதலான சீதனங்களை மகிழ்ச்சியோடு பெண்களுக்குக் கொடுக்க வேண்டும்.

இல்லறத்தான் தன் உறவினர்களையும், நண்பர்களையும், வேலை ஆட்களையும் அன்புடன் நடாத்தவேண்டும். அவர்களுக்குப் பொருள் தேவைப்படின் கொடுத்து உதவ வேண்டும். தான் வாழும் ஊருக்கும், ஏழை எளியவர்களுக்கும் நலம் செய்வதில் குடும்பஸ்தன் ஆயத்தமாக இருக்கவேண்டும்.

குடும்பஸ்தன் வீராதி வீரனாக இருக்க வேண்டும். அப்பொழுதுதான் அவன் கேட்டை எதிர்த்து நிற்க முடியும். பகைவனிடம் அவன் வீரனாக நடந்துகொள்ளவேண்டும். நண்பர்களிடமும் உறவினர்களிடமும் பணிவுடனும் அன்புடனும் நடந்துகொள்ளவேண்டும்.

கேட்டுக்கு இல்லறத்தான் அடிபணியக் கூடாது. கெட்டவர்களுக்கு அவன் துணைபுரியக் கூடாது. கெட்டவர்களுக்கு மரியாதை காட்டவும் கூடாது. நல்லவர்களுக்கு அவன் துணை புரியவேண்டும். அவர்களிடம் அவன் மரியாதையாகவும் நடந்துகொள்ளவேண்டும். நல்லவர்களோடுதான் அவன் சிநேகம் செய்யவேண்டும்.

இல்லறத்தான் தன்னைப் பற்றிப் பொது மேடையில் புகழ்ந்து கொள்ளக்கூடாது. தன்னுடைய பெருமைகளைத் தானே பொதுமக்களிடம் பேசக்கூடாது. ரகசியமான விஷயங்களை அவன் பாதுகாக்கவேண்டும்.

சுவாமி விவேகானந்தரின் இக்கருத்துக்களை எல்லாம் நடைமுறைக்குக் கொண்டு வருகின்ற இல்லறத்தான் வெற்றிகரமாக வாழ்க்கையை நடத்துவான். அவன் வாழ்க்கையின் இறுதிக் கட்டத்தில் துறவு மனப்பான்மையைப் பெற்றுப் பரத்துக்கு உரியவனாவான். இம்மையிலும், மறுமையிலும் அவன் இன்பவாழ்வு வாழ்ந்து வருவான்.

இனி, ஒவ்வொரு நாளும் ஒவ்வொருவரும் தமக்குரிய கடமையைச் செய்யும்பொழுதுதான் உலகம் சுபிட்சம் அடையும். உலகத்துக்கு நம் நாடு செய்யவேண்டிய கடமை எது என்பதைச் சுவாமி விவேகானந்தர் பகர்ந்துள்ளார். "இந்தியா ஆன்மீகத்தை வளர்த்து உலகுக்கு அதை வழங்க வேண்டும். மற்ற நாடுகள் இந்தியாவிடமிருந்து ஆன்மீகத்தைத் தான் எதிர்பார்க்கின்றன. இந்தியா உலகுக்கு ஆன்மீகத்தைத் தந்து உலகில் சாந்தியையும் அமைதியையும் வளர்க்கும் கடமையைச் செய்யும் பொழுது தான் இந்தியா உன்னத நிலையை அடையும்.

தனி மனிதனும் நாடும் சுவாமி விவேகானந்தரின் மேற்கூறிய கருத்துக்களை நடைமுறைக்குக் கொண்டு வரும்பொழுது நாடும் தனி மனிதனும் கடமையிலிருந்து தவறாதவர்களாகின்றனர். கடமையைச் செய்வோம். உரிமை தானாகவே வரும். கடமையை வழிபாடாகச் செய்து மேன்மை அடைவோமாக.

---

## சூதாட்டம்

சூதும் வாதும் வேதனை செய்யும். பிறர் பொருளை முறைதவறிக் கைப்பற்றுவது சூதாட்டம். அப்படிச் சம்பாதித்த செல்வம் நிலைத்திராது. பாபத்தையும் பாதரசத்தையும் ஜீரணம் பண்ண முடியாது. சூதாட்டம் பொல்லாதது என்பது தொன்று தொட்டு நிரூபிக்கப்பட்டு வந்திருக்கிறது.

பழங்காலத்தில் பாண்டவர்களும் கௌரவர்களும் பகடை என்ற சூதாட்டம் விளையாடி நாட்டைப் பாழ்படுத்தினார்கள். இக்காலத்தில் நம்மவர்கள் பரிசுச்சீட்டு என்னும் சூதாட்டத்தையும் குதிரைப் பந்தயம் என்னும் சூதாட்டத்தையும் செய்து வருகிறார்கள். இவைகளின் விளைவு கேடு. நல்லார் இத்தீங்குகளினின்று விலகி இருப்பார்களாக. பொதுநலனுக்காகவென்றும் இவைகளில் ஈடுபடலாகாது. இவைகளில் கருத்துச் செலுத்தாதிருக்குமளவு நலத்தை நாம் வளர்த்தவர்களாவோம்.

---

# குறிப்புகள்

**பாதயாத்திரை 11**

ஆண்டுதோறும் மே மாதத்தில் தபோவனத்தின் சார்பாகப் பாதயாத்திரை நிகழ்வது உண்டு. பத்து மாவட்டங்களில் பத்துப் பாதயாத்திரைகள் இதுவரை நிகழ்ந்துள்ளன. இவ்வாண்டு நீலகிரி மாவட்டத்தில் பதினொன்ருவது பாதயாத்திரை நிகழ்ந்தது. மே மாதம் ஐந்தாம் தேதி அப்பாதயாத்திரை உதகை நகரில் ஆரம்பித்தது; மே மாதம் எட்டாம் தேதி குன்னூரில் அப்பாத யாத்திரை முடிவு பெற்றது.

அப்பாதயாத்திரையில் பல மாவட்டங்களிலிருந்து ஆசிரியர்களும் பக்தர்களுமாக எண்பதுபேர்கள் கலந்துகொண்டனர். *3 – 5 – 83* செவ்வாய் அன்று மாலை ஆறு மணிக்கு உதகை தேவாங்கர் கல்யாண மண்டபத்திற்குப் பாதயாத்திரை அன்பர்கள் அனைவரும் வந்து சேர்ந்தனர். அன்று இரவு அங்குப் பாதயாத்திரை அன்பர்கள் முறையே பஜனையும், பிரார்த்தனையும், தியானமும் செய்தனர். இரவு சிற்றுண்டிக்குப்பின் பாதயாத்திரிகர்கள் ஒருவருக்கொருவர் தங்களை அறிமுகம் செய்துகொண்டார்கள். பாதயாத்திரை முழுவதும் நடந்துகொண்டே நாமஜபம் நிகழ்ந்துகொண்டிருக்க வேண்டும். தேவையான இடங்களில் மக்களுக்குச் சேவை செய்யவேண்டும். உணவு விஷயத்திலும் கட்டுப்பாடு வேண்டும். தூய எண்ணமே குடிகொண்டிருக்க வேண்டும்—இத்தகைய விதிமுறைகளை அனுசரிக்கவேண்டும் என்று அறிவுறுத்தப்பட்டது. அதன் பிறகு அனைவரும் உறங்கச் சென்றனர்.

உதகை கடல்மட்டத்திற்குச் சுமார் எட்டாயிரம் அடி உயரத்தில் அமைந்துள்ளது. எனவே கோடைகாலமாக இருந்தபொழுதும் அங்குக் குளிராக இருந்தது. பருகுவதற்கும் குளிப்பதற்கும் வெந்நீர் தேவைப்பட்டது. மழையின்மையினல் உதகையிலும்குடிநீர்க்கஷ்டம் இருந்தது. பாதயாத்திரைக்கு ஏற்பாடு செய்திருந்த அன்பர் நீர்க் கஷ்டத்துக்கிடையே நூறுபேர் குளிப்பதற்கு வெந்நீர் ஏற்பாடு செய்திருந்தது பாராட்டுதற்கு உரியது. 4-5-83 அன்று அதிகாலை நான்கு மணிக்குக் குளிரையும்பொருட்படுத்தாமல் பாதயாத்திரை அன்பர்கள் எழுந்திருந்து வெந்நீரில் குளித்துவிட்டு வழிபாட்டில் கலந்துகொண்டனர். உடல் வளர்ச்சிக்கு உணவு அவசியமாக இருப்பது போன்று உள்ள வளர்ச்சிக்குப் பிரார்த்தனை அவசியமானது. பாதயாத்திரை அன்பர்கள் ஒவ்வொரு நாளும் இனிமேல் பிரார்த்தனை செய்த பிறகு தான் வாழ்க்கையைத் தொடங்கவேண்டும் என்று கேட்டுக்கொள்ளப்பட்டார்கள். மௌனமாக இருந்து பாதயாத்திரிகர்கள் அதற்கு முழுச்சம்மதம் தெரிவித்தனர்.

*4—5—83* அன்று உதகையிலுள்ள முக்கியமான இடங்களைப் பார்ப்பதற்குத் திட்டம் போடப்பட்டிருந்தது. காலை எட்டு மணிக்குப் பாதயாத்திரை அன்பர்கள் அனைவரும் உதகையிலுள்ள ஸ்ரீ ராமகிருஷ்ண மடத்திற்கு 'ஹரி ஓம் ராம் ராம் ஹரி ஓம் ராம், ஹரி ஓம் ராமகிருஷ்ண ஹரி ஓம் ராம்' என்ற நாம ஜபத்துடன் வரிசையாக ஒழுங்குப் பாட்டுடன் சென்றனர். காலை பத்து மணிக்கு ராமகிருஷ்ண மடத்தை அடைந்தனர். அண்மையில் ஸ்ரீராமகிருஷ்ணர் பளிங்குச் சிலை திருவுருவத்தை மடத்திலுள்ள கோயிலில் பிரதிஷ்டை செய்திருந்தனர். அத்திருவுருவத்தின் முன் அமர்ந்து உருக்கமாகப் பஜனை செய்தனர். பாதயாத்திரை அன்பர்கள் அனைவரையும் உதகை மடத்தின் தலைவராக இருக்கும் ஸ்ரீமத் ஏகாத்மானந்தர் அன்புடன் வரவேற்றுப் பிரசாதம் வழங்கி உபசரித்தார். அம்மடமானது ஸ்ரீ ராமகிருஷ்ணரின் நேர் சிஷ்யராகிய ஸ்ரீ சுவாமி சிவானந்த மஹராஜ் அவர்கள் விருப்பத்தின்படி கட்டப்பட்டது என்பதையும், அம்மடத்தில் திருப்பராய்த்துறை ஸ்ரீ ராமகிருஷ்ண தபோவனத் தலைவர் ஸ்ரீமத் சுவாமி சித்பவானந்தர் அவர்கள் பதினன்கு ஆண்டுகள் தவ வாழ்க்கை வாழ்ந்தார்கள் என்பதையும், அங்குதான் சுவாமி சிவானந்த மஹராஜ் அவர்களிடமிருந்து சந்நியாச ஆச்ரமம் ஏற்றுக்கொண்டார்கள் என்பதையும் அத்தகைய மகத்துவமான இடத்திற்கு வந்திருக்கிறோம் என்பதையும் அறிந்த பாதயாத்திரை அன்பர்கள் அளவிலா ஆனந்தம் அடைந்தனர். பதினொரு

மணிக்கு அங்கிருந்து புறப்பட்டு மதிய உண விற்குத் தேவாங்கர் கல்யாண மண்டபத்திற்கு வந்து சேர்ந்தனர்.வரும் வழியில் ஜே. ஜே. குட் வின் அவர்களின் சமாதியையும் தரிசித்து வந்தனர். ஜே. ஜே. குட்வின் என்பவர் சுவாமி விவேகானந்தரின் ஆங்கிலச் சொற்பொழிவுகள் அனைத்தையும்சுருக்கெழுத்தில் குறித்துவைத்த பெரியவராவார். ஸ்ரீ ராமகிருஷ்ணருடைய சம் பாஷணைகளை எல்லாம் 'ம' என்னும் மகேந் திரநாத் குறித்து வைத்தது போன்று சுவாமி விவேகானந்தருடைய சொற்பொழிவுகளைக் குட்வின் குறித்து வைத்தார்.

மதிய உணவிற்குப் பின் சிறிது ஓய்வு எடுத் துக்கொண்டு மாலை சுமார் மூன்றரை மணிக்கு நான்கு வேன்கள் மூலம் மேற்குத் தொடர்ச்சி மலையின் உயர்ந்த சிகரமான தொட்டபெட்டா வுக்குச் சென்றனர். அங்கிருந்து இயற்கை அழகையும், நீலகிரி மாவட்டத்தின் பல நகரங் களையும், கிராமங்களையும் பார்த்து மகிழ்ச்சி அடைய முடிந்தது. பின் உதகையில் அமைந் துள்ள மிகப்பெரியபூங்காவனத்தையும் சென்று பார்த்தனர். அதன் பின் உதகையிலுள்ள ஏரியையும் அதில் படகுகள் செல்லும் காட்சி யையும் பார்த்துவிட்டு மாலை ஆறு மணிக்கு மாரியம்மன் கோவில் வழிபாட்டிற்கு வந்தனர். ஆங்கு மாரியம்மன், காளியம்மன், கணேசன், சிவன் ஆகிய சந்நிதிகளுக்குச் சென்று தரிசித் தனர். ஆங்கு ஒருமணி நேரம் பஜனை செய்த னர். பஜனைக்குப் பின் ஞானசக்தி, இச்சா சக்தி, கிரியாசக்தி ஆகிய மூன்றுக்கும் விளக் கம் தரப்பட்டது. முருகன் ஞானசக்திக்குச் சின்னமாகவும், வள்ளி இச்சாசக்திக்குச் சின்ன மாகவும்,தெய்வயானை கிரியா சக்திக்குச் சின்ன மாகவும் விளங்குகிறார்கள் என்பது விளக்கப் பட்டது. ஆலயத்தின் தத்துவங்களும், ஆங்கு நிகழும் பூஜா கிரியைகளின் தத்துவங்களும் விளக்கப்பட்டன. முறையாக ஆலய வழிபாடு செய்வது ஆலயத்தின் அருட் சக்தியையும் நம்மிடத்தில் ஆன்மிக உணர்வையும் வளர்க் கிறது என்பது விளக்கிக் கூறப்பட்டது. இரவு சத் சம்பாஷணையுடன் அன்றைய நிகழ்ச்சி பூர்த்தியானது.

5--5—83 அன்று அதிகாலையில் எழுந்து வெந்நீரில் ஸ்நானம் செய்துவிட்டுப் பாதயாத் திரை அன்பர்கள் அனைவரும் ஐந்து மணியி லிருந்து ஆறு மணிவரை வழிபாடு செய்தனர். காலை ஆறு மணிக்குப் பாதயாத்திரை தொடங் கியது. "சிவாய நம ஓம் சிவாய நம:" என்று பாதயாத்திரைக் குழுவினரில் பாதிப்பேர் உச் சரிக்க மற்றப் பாதிப்பேர் "சிவாய நம ஓம் நம சிவாய"என்று உச்சரித்தனர்.நடக்கும்பொழுது இம்மாதிரியே நாம உச்சாரணை தொடர்ந்து நிகழ்ந்து வந்தது. வாழ்க்கையில் ஏற்றமும் இறக்கமும் மாறி மாறி வருவது போன்று பாதையில் ஏற்றமும் இறக்கமும் மாறிமாறி வந்து கொண்டிருந்தன. மலைமீது ஏறு கின்ற பொழுது ஆங்கு அமைகின்ற இறக் கமும் மலையின் உச்சிக்கு எடுத்துச் செல்கின் றது. அதுபோன்று சாதனையில் சில சமயம் இறக்கம் போன்று தென்படுகின்ற மனநிலை யும், லட்சியத்தை நோக்கி எடுத்துச் செல்கின் றது. சாதனையில் மனநிலை உயர்ந்து வருகின்ற பொழுது இதுதான் முடிந்தநிலை என்று தோன்றும். ஆனால் சாதனையில் அது ஒரு படியே தவிர முடிந்த நிலை ஆகாது. பாத யாத்திரையில் ஓர் ஏற்றத்தில் ஏறுகின்ற பொழுது உச்சி கண்ணுக்கு எட்டுகின்றது. அதுதான் உச்சி என்று ஏறினால் ஒருவளைவில் பாதை வளைந்து மீண்டும் மேலே போய்க் கொண்டிருக்கின்றது. மலையின் உச்சி அது அன்று என்று அதை அடைந்த பிறகுதான் தெரிய வந்தது. அங்ஙனம் சாதனையில் நாம் மேலே போக வேண்டிய பகுதி மிக உயர்ந்த தாகும். சாதனையில் ஏற்படுகின்ற சிறு முன் னேற்றத்தைப் பெரும் முன்னேற்றமாகக் கருதி நாம் ஏமாந்து போகக்கூடாது என்ற படிப் பினையைப் பாதயாத்திரிகர்கள் பெற்றனர்.

இப்பாதயாத்திரையில்பன்னிரண்டு மணிக்கு நடக்கும் பொழுதும் வெயிலின் கொடுமையை உணராது இயற்கையின் அழகை ரசித்துக் கொண்டு நடந்தனர். சமவெளிகளில் நடந்த பாதயாத்திரைகளில் காலை பத்து மணிக்கே வெயிலின் கொடுமை இருந்தது. ஆனால் இப் பாதயாத்திரை வெயிலை வரவேற்கும் நிலையில் தான் அமைந்திருந்தது. வழியில் 'லவ்டேல்' என்னும் இடத்தில் வேன் மூலம் சிற்றுண்டி கொண்டுவந்து பாதயாத்திரை அன்பர்களுக்கு வழங்கப்பட்டது. சிற்றுண்டிக்குப் பின் நாம

உச்சாரணையுடன்நடந்துசென்று காலை ஒன்பது மணிக்குக் காந்திப் பேட்டையை அடைந்தனர். ஆங்குக் கிருஷ்ணன் ஆலயம் ஒன்று உள்ளது. அவ்வாலயத்தின் முன் அவ்வூர்ப் பெரியவர்களும், சிறுவர்களும், சிறுமிகளும் பாதயாத்திரை அன்பர்களும் சேர்ந்து ஐக்கிய வழிபாடு செய்தனர். ஆங்குள்ள சிறுவர் சிறுமிகளுக்குப் பெற்றோர்களை வணங்கும் முறை கற்பிக்கப்பட்டது.' காலையில் எழுந்து உடல் சுத்தம் செய்து கொண்டு கிருஷ்ணன் ஆலயத்தைச் சுத்தம் செய்யவேண்டும். உங்கள் பகுதியில் கிடைக்கும் புஷ்பத்தைப் பறித்துக்கொண்டு வந்து கிருஷ்ணனுக்குச் சாத்தவேண்டும்.பிறகு கிருஷ்ணன் ஆலயத்தில் அமர்ந்து நாமாவளியும், துதிப்பாடல்களும் பாடவேண்டும்' என்று அச்சிறுவர்களுக்கு அறிவுரைவழங்கி நாமாவளியும் துதிப்பாடல்களும் அடங்கிய பஜனைப்பாடல் புத்தகம் ஒன்று அவர்களுக்குத் தரப்பட்டது. அவர்கள் கண்ணனுக்கு நைவேத்தியமாகக் கொண்டு வந்திருந்த உணவுப் பொருள்களைக் கண்ணனுக்குப் படைத்துப் பின் பிரசாதமாக எல்லாருக்கும் அவை வழங்கப்பட்டன. அவ்வூர் மக்கள் அத்துடன் திருப்தி அடையவில்லை. பாதயாத்திரிகர்கள் அனைவருக்கும் தேநீர் கொடுத்தபிறகு தான் அவர்கள் திருப்தி அடைந்தனர்.

பாதயாத்திரையில் சிலநிகழ்ச்சிகள்தெய்வத் திட்டத்தின்படி நிகழ்வதையும் அறிய முடிந்தது. திடீரென்று கரடு முரடான பாதையில் அங்குள்ள அன்பர்கள் யாத்திரிகர்களைக் கீழ் நோக்கி அழைத்துச் சென்றார்கள். நல்ல பாதையில் சென்று கொண்டிருந்த பாதயாத்திரிகர்களுக்குத் திடீரென்று ஏற்பட்ட மாறுதல் மனக்கலக்கத்தை உண்டு பண்ணியது. சுமார் இரண்டுகிலோ மீட்டர் கீழே இறங்கிச் சென்றதும்பக்தியே உருவெடுத்த ஆண்களும், பெண்களும், சிறுவர்களும், சிறுமிகளும் ஒரே சமயத்தில் வீழ்ந்து வணக்கம் செய்தது பாதயாத்திரிகர்களின் உள்ளத்தைப் புல்லரிக்கச் செய்தது. ஸ்ரீ ராமகிருஷ்ணர் பகவானும் பக்தர்களும், பாகவதமும் ஒன்று என்று பகர்ந்துள்ளார். பக்தர்களைப் பார்த்தது பரமானந்தமாக இருந்தது. பக்திப் பரவசத்துடன் அவர்கள் செய்த பஜனை பண்டரிபுரத்தை ஞாபக மூட்டியது. பண்டரிபுரமோ என்று எண்ணிய பாதயாத்திரிகர்களுக்குத் தாங்கள் வந்தடைந்த ஊர் 'தாம்பட்டி' என்று தெரிய வந்தது. பண்டரிபுரம் போகாத குறை தாம்பட்டி வந்ததனால் நிறைவேறிவிட்டது என்று வந்த வழிநடை வருத்தத்தை மறந்து பக்திப் பரவசத்தில் மூழ்கினர். தாம்பட்டி என்ற சொல்லுக்குத் தங்களுடைய ஊர் என்று பொருள். அஸ்தினபுரத்திற்குப் பாண்டவர்களின் தூதராகக் கிருஷ்ணன் வந்தார். அஸ்தினபுரத்திலுள்ள ஒவ்வொரு வீட்டையும் இது யார் வீடு என்று கேட்டுக்கொண்டே வந்தார். இது இன்னருடைய வீடு என்று பதில் கூறினர்கள். விதுரருடைய மனைக்கு வந்தபொழுது இது யாருடைய வீடு என்று கேட்டார். இது உங்களுடைய வீடு என்று விதுரன் சொன்னன். உடனே கிருஷ்ணன் அவ்வீட்டிற்குள் நுழைந்தார். பாதயாத்திரை திட்டத்தில் தாம்பட்டி சேர்க்கப்படவில்லை. ஆனல் தாம்பட்டி என்ற ஊரின் பெயரின் பொருளுக்கு ஏற்ப அம்மக்கள் காட்டிய அன்பு இவ்வூர் உங்களுடைய ஊர் என்று சொல்லி அழைப்பதாக இருந்தது. எனவே கண்ணன் விதுரன் வீட்டிற்குள் நுழைந்தது போன்று பாதயாத்திரை அன்பர்கள் அவ்வூருக்குள் சென்றனர். அவ்வூரின் மத்தியில் உள்ள காந்தி பஜனலயத்திற்குப் பஜனையுடன் அழைத்துச் சென்றனர். ஆங்குள்ள ஆலயத்தில் கண்ணன், சிவன், விநயகர் ஆகிய வெண்பளிங்குச் சிலைகளை மூல விக்கிரகங்களாக அமைத்திருந்தனர். ஸ்ரீ ராமகிருஷ்ணர், ஸ்ரீ சாரதாதேவி, ஸ்ரீ விவேகானந்தர் ஆகிய மூவரின் திருவுருவப்படங்களை மூலஸ்தானத்தில் வைத்திருந்தனர். பிரார்த்தனை மண்டபத்தில் எல்லாத் தெய்வங்களின் படங்களையும் சமயத்தலைவர்களின் படங்களையும் அமைத்திருந்தது அவர்களின் சமரச நோக்கை வெளிப்படுத்தியதாக இருந்தது. அக்கோயிலுக்குள் நுழைந்ததும் மனதிற்கு ஒரு சாந்தி ஏற்பட்டது. சுமார் அரைமணி நேரம் ஆங்கு உருக்கமான வழிபாடு நடந்தது. அவ்வூர்ப் பெண்கள் கன்னடத்தில் பாடிய பாடல் ஒன்று உருக்கமாக இருந்தது. நாராயணனைப் பணிய ஓடி வாருங்கள் என்பது அப்பாடலின் கருத்தாகும்.

அவ்வூரின் அமைப்பும் சூழ்நிலையும் ஸ்ரீசாரதா தேவியார் பிறந்த ஜயராம்பாடியையும், ஸ்ரீராம கிருஷ்ணர் பிறந்த கமார்ப்புகூரையும் நினைவுக் குக் கொண்டு வந்தது. அந்நிகழ்ச்சியில் அன் பர் ஒருவர்

"கங்காதீர விஹாரி
நட்சிணேசுவர சஞ்சாரி
இந்து தர்மோபகாரி
ஸ்ரீ ராமகிருஷ்ண அவதாரி''

என்று பாடியது எல்லாருடைய உள்ளத்தை யும் தொடுவதாக இருந்தது. அதன் பிறகு அங்கிருந்து அதிகரட்டி என்னும் ஊரை நோக்கிச் சென்றோம். அதிகரட்டி மக்கள் தங்கள் ஊரிலிருந்து இரண்டு கி. மீ. தூரம் பஜனையுடன் எதிர்நோக்கி வந்து பாதயாத் திரை அன்பர்களைத் தங்கள் ஊருக்கு அழைத் துச் சென்றனர். நண்பகல் இரண்டு மணிக்கு அவர்களுடைய குலதெய்வமாகிய கரிவேட்ட ராயர் கோயிலை அடைந்தோம். வழியில் ஊர் மக்கள் செய்த நர்த்தனத்தோடுகூடிய பஜனை பாதயாத்திரை அன்பர்களின் உள்ளத்தைக் கவர்ந்ததோடு அவர்களுள் சிலரை ஆடவும் தூண்டியது. அக்கோயிலில் பூஜை செய்த பூஜாரி தீர்த்தத்தைப் பூஜை முடிந்தான பிறகு யாவர் மேலும் "எல்லா ஜீவராசிகளையும் காப் பாற்றப்பா'' என்று சொல்லிக்கொண்டு புரோ க்ஷணம் செய்தார். அவ்வூர் ஆரம்பப்பள்ளி யில் தங்குவதற்கும் உணவிற்கும் ஏற்பாடு செய்திருந்தனர். வழிபாட்டை முடித்துக் கொண்டு ஆரம்பப்பள்ளிக்குச் சென்று உணவு எடுத்துக்கொண்டு மாலை ஐந்து மணிவரை ஓய்வு எடுத்துக்கொண்டனர்.

மாலை ஐந்து மணிக்கு அவ்வூரில் சிறந்தமுறை யில் நடைபெற்று வரும் கலைமகள் சேவா சங் கத்திற்குச் சென்றோம். அச்சங்கம் 1937ல் திருப்பராய்த்துறை தபோவனத் தலைவர் ஸ்ரீமத் சுவாமி சித்பவானந்தர் அவர்களால் ஆரம்பித்து வைக்கப்பட்டது. அங்கு நாற்பது சிறுவர் சிறுமிகளுக்கு நாள்தோறும் மாலை ஆறு மணிமுதல் எட்டு மணிவரை வழிபாடும், பஜனை யும் கற்பிக்கப்படுகின்றன. அவர்களுடைய வருகையும் பதிவு செய்யப்படுகிறது. அவர்கள் நாள்தோறும் ஒவ்வொரு குறள் சொல்லி வருகையைப் பதிவு செய்து கொள்வார்கள். ஒரு சிறுவன் சொன்ன குறளை மற்றவர்கள் சொல்லக்கூடாது என்னும் விதியையும் அனு சரித்து வருகிறார்கள். அவ்வூரில் ஆசிரியராகப் பணிபுரிபவர்கள் அனைவரும் அச்சங்கத்தில் அங்கத்தினர்களாக உள்ளனர். அவர்களும் ஆன்மீகத்துறையில் ஈடுபட்டு ஒற்றுமையாகப் பல நற்காரியங்கள் செய்து வருகின்றனர். அங்குள்ள தமிழ் ஆசிரியர்கள் ஒவ்வொருவரும் கீதையின் இரண்டு அத்தியாயங்களுக்கு விளக் கம் சொல்லிப் பகவத்கீதை முழுவதற்கும் விளக் கம் கூறிக் கீதாயக்ஞம் செய்துள்ளார்கள். இது அவர்கள் செய்துள்ள நற்காரியங்களுள் ஒன்றா கும். பாதயாத்திரை அன்பர்கள் அனைவருக் கும் மூன்று வேளை உணவும் அவ் ஆசிரியர் களே தயார் செய்து பரிமாறினார்கள். அப் பணியை அவர்கள் சிரத்தையோடும் மகிழ்ச்சி யோடும் செய்தார்கள். அன்று மாலை ஆறுமணிக் குப் பொதுக்கூட்டம் நடந்தது. முதலில் அவ்வூர் மக்கள் பஜனை பாட, அப்பஜனைக்கேற்ப ஓர் அன்பர் நர்த்தனம் புரிந்தார். பொதுக்கூட்டத் தில் அவ்வூர் ஆண்கள் பெண்கள் அனைவருமே கலந்துகொண்டனர். வீட்டில் யாரும் இல்லா மல் கூட்டத்திற்கு அனைவரும் வந்திருந்தனர். சுமார் இரண்டாயிரம் பேர் குழுமியிருந்தனர். அவர்கள் அமர்ந்திருந்த காட்சி ஒழுங்குப்பாடே வடிவெடுத்ததாக இருந்தது. தாய்மார்கள் தனியாக ஒரு காலரியில் அமர்ந்திருப்பது போன்று வரிசையாக அமர்ந்திருந்தனர்.

"மனம் ஒன்றுபட்டுச் செய்கின்ற செயல் களுக்கு வலிவு உண்டு. தன்னம்பிக்கை மிக வும் அவசியமானது. உங்களுக்கு ஏற்படும் பிரச்னைகளை எல்லாம் உங்களுக்குள்ளேயே தீர்த்துக்கொள்வது பாராட்டத்தக்கது. உங் களுக்குள் நல்ல பண்பாளர் ஒருவரைத் தலைவ ராக வைத்துக்கொண்டு அவருடைய சொற்படி நடந்து வருவது நல்ல திட்டமாகும். பஜனை யிலும், வழிபாட்டிலும் ஒருமை மனதுடன் நீங்கள் கலந்துகொள்வது உங்களுடைய இத யத்தை மலரச் செய்யும். ஸ்ரீ ராமகிருஷ்ணர் இதயத்தை மலரச்செய்யும் கல்விதான் வேண் டும் என்றார். அந்தக் கல்வியை நீங்கள் பெற்று வருகின்றீர்கள். பஜனையில் ஈடுபடும்பொழுது உங்களை நீங்கள் அடியோடு மறந்துவிடுவது உங்களுடைய சிறுமையை ஒழிக்கப் பயன்படு

கிறது. ஸ்ரீ சாரதா தேவியார் தம்மைத் தேடி வந்த வாலிபன் ஒருவனுக்கு அன்பு காட்டி உபசரித்து அவனைத்தம் குழந்தை போன்று எண்ணி அவனுக்கு உதவி செய்தார். நீங்கள் எங்களை அன்பு காட்டி உபசரிப்பது சாரதா தேவியார் காட்டிய அன்பு போன்று அமைந் திருக்கிறது. உங்களிடத்தில் நல்லறிவும், பேரன்பும், பேராற்றலும் உருவாகி நீங்கள் வாழ்க்கையில் மேன்மேலும் முன்னேற்றம் அடைந்து வருவீர்களாக.” இத்தகைய கருத் துக்கள் அவர்களுக்கு வழங்கப்பட்டன. சொற் பொழிவுக்குப் பின் அன்றிரவு அவர்களுக்கு ஸ்ரீ ரமணர் வாழ்வு, ஸ்ரீ சுவாமி தயானந்தர் வாழ்வு, கிராமப்புறத் தூய்மை ஆகிய திரைப் படக் காட்சிகள் திரையிட்டுக் காண்பிக்கப் பட்டன.

இப்பொழுது எங்கும் ஏற்பட்டுள்ள நீர்க்கஷ் டம் அங்கும் இருந்தது. ஆனல் பாதயாத் திரை அன்பர்களுக்கு நீர் இல்லையே என்ற குறை ஏற்படாது இருக்க அவ்வூர்த் தாய்மார் கள் ஒவ்வொரு வீட்டில் இருந்தும் ஒவ்வொரு குடம் நீர்கொண்டு வந்து கொடுத்துப் பாத யாத்திரை அன்பர்களின் தேவையைப் பூர்த்தி செய்தார்கள்.

6–5–83 அன்று பாதயாத்திரிகர்கள் அனைவ ரும் ஐந்து மணிக்கு எழுந்து காலைக்கடன்களை முடித்துக்கொண்டு வெந்நீரில் ஸ்நானம் செய்து விட்டுப் பிரார்த்தனை செய்தனர். பிரார்த் தனை முடிந்தபின் பிறரிடம் குற்றம் காணுத மன நிலையை வளர்த்துக்கொள்ள வேண்டும் என் னும் அறவுரை பாதயாத்திரிகர்களுக்கு வழங் கப்பட்டது. பிரார்த்தனைக்குப் பிறகு வாழ்க் கையைத் தொடங்கவேண்டும் என்னும் முதல் உறுதி மொழியோடு பிறரிடம் குறைகாணுது பிறரிடம் உள்ள நல்லதையே எடுத்துக்கொள்ள வேண்டும் என்னும் இரண்டாவது உறுதி மொழியையும் பாதயாத்திரை அன்பர்கள் எடுத்துக்கொண்டார்கள். காலை எட்டு மணிக்கு இரண்டாவது நாள் பாதயாத்திரையை அதி கரட்டியில் இருந்து தொடங்கினேம்.

“ஓம்சக்தி ஓம்சக்தி ஓம்சக்தி ஓம்” என்னும் நாமாவளியைப் பாதிப்பேர்கூற மற்றப் பாதிப் பேர் “ஆதிசக்தி மஹாசக்தி பராசக்தி ஓம்” என்று கூறப் பாதயாத்திரை ஆரம்பமாயிற்று. அன்று போகும் வழி ஒற்றையடிப் பாதையாக இருந்தது. நாமாவளி சொல்லிக் கொண்டு ஒற்றையடிப் பாதையில் மலைப்பகுதியில் ஒருவர் பின்ஒருவர் வரிசையாகச் சென்ற காட்சி பார்ப்பவர்களுக்குப் பக்தி உணர்வை ஊட்டுவதாக இருந்தது. சுமார் இரண்டு கி. மீ. நடந்ததும் முட்டிநாடு என்னும் கிரா மத்தை அடைந்தோம். இயற்கைச் சூழ் நிலையில் அவ்வூர் மக்கள் வாழ்ந்து வந்ததால் கள்ளம், கபடம் அற்ற உள்ளம் படைத்தவர் களாக இருந்தார்கள். செயற்கை நாகரிகம் புகாத இடத்தில் மக்களுடைய மனது தூய நிலையில் இருக்கிறது என்பதை ஆங்கு அறிய முடிந்தது. நாகரிகம் என்னும் முறையில் மனித னுடைய மனதில் தூய்மையும், அன்பும் மறைந்துகொண்டு இருக்கின்றன. நவநாகரிகம் புகாதகிராம மக்களிடையே நாம் பழகும்போது, அவர்களிடத்தில் மனத் தூய்மையையும், அன்பையும் காணலாம். உதகைப் பாதயாத்தி ரையில் எங்களுக்கு இது நல்ல அனுபவமாக இருந்தது. “ஹாவ் காவ்” என்றுமகிழ்ச்சிக்குரல் கொடுத்து அவ்வூர்மக்கள் பாதயாத்திரிகர்களை வரவேற்றனர். “ஹாவ் காவ்” என்று அவர் கள் மொழியில் கூறியதன் பொருள் ‘வாருங் கள் சாப்பிடுங்கள்’ என்பது ஆகும். புல் தரை யின் மத்தியில் அவ்வூர் அரங்கநாதர் கோயில் அமைந்திருக்கிறது. அக்கோயிலுக்குப் பாத யாத்திரிகர்களை அழைத்துச்சென்றனர். வழி பாடு செய்துவிட்டு அப்புல்தரையிலேயே அனைவரும் அமர்ந்தனர். நர்த்தனத்தோடு அவ்வூர் மக்கள் பஜனை செய்தது உள்ளத்தைக் கவர்வதாக இருந்தது. அவர்களுடைய பஜனை யிலும், நர்த்தனத்திலும், உள்ளத்தைப்பறி கொடுத்த பாதயாத்திரிகர்கள் தாங்களும் பஜ னையிலும் நர்த்தனத்திலும் கலந்து கொண்ட னர். சுமார் ஒரு வயதுக் குழந்தை பஜனைக் கோஷ்டியினர் ஆட்டத்திற்குக் கைத்தாளம் போட்டு மகிழ்ச்சி அடைந்ததை அங்குதான் பார்த்தோம். அதைப் பார்த்துப் பாதயாத் திரிகர்கள் ஆனந்தம் அடைந்தனர். அக் கிராம மக்களுடன் நீண்ட நேரம் இருக் கலாம் என்ற விருப்பம் பாதயாத்திரிகர்கள் உள்ளத்தில் ஏற்பட்டது. ஆனல் காலம் இடம் தரவில்லை. முட்டி நாட்டிற்குப் பாத

யாத்திரிகர்கள் போகும் செய்தி சில மணி நேரத்திற்கு முன்புதான் அவர்களுக்குக் கிடைத்தது. எனவே எங்களைப் பஜனையில் பரவசமாக அமர்ந்திருக்கச்செய்து விட்டு அவர்கள் எங்களுக்குப் பஞ்சாமிர்தம், பிஸ்கட், தேநீர் ஆகியவற்றை ஆயத்தப்படுத்தினார்கள். அவர்கள் கொடுத்த யாவும் அமிர்தமாக இருந்தன. ஏனெனில் அவற்றில் அன்பு கலந்திருந்தது. அத்துடன் அவர்கள் நூறுரூபாய் அன்பளிப்பும் செய்தனர். அவர்களுடைய அன்புக்குக் கட்டுப்பட்டுப் பாத யாத்திரிகர்கள் அதை ஏற்றுக்கொள்ளவேண்டியதாயிற்று. முட்டி நாட்டு நிகழ்ச்சி பாத யாத்திரிகர்கள் உள்ளத்தில் ஆழ்ந்து பதிந்து விட்டது.

அங்கிருந்து மேலும் இயற்கை எழில் நிறைந்த மலையில் ஒற்றையடிப் பாதையில் பாதயாத்திரிகர்கள் ஏறிச் சென்றனர். பாதை ஒரே ஏற்றமாக இருந்தது. கொல்லிமலை என்னும் இடத்தை அடைந்ததும் கோத்தர்கள் என்று தங்களை அழைத்துக்கொள்ளும் ஆதிவாசிகள் கொம்பு, தாரை, தப்பட்டைகொண்டு வரவேற்று, விக்கிப்பழம் என்னும் ஒருவகைப் பழத்தைத் தந்தனர். அது பார்ப்பதற்குப் பசுமையாக இருந்தது. ஆனால் சாப்பிடுவதற்குச் சுவையாக இருந்தது. அவ் ஆதிவாசிகள் அவர்களுடைய குல தெய்வமான அரங்கநாதர் ஆலயத்துக்கு அழைத்துச் சென்று சுவாமி தரிசனம் செய்து வைத்தனர். அங்குள்ள பூஜாரி அவர்களுடைய வரலாற்றைப் பற்றியும் அவர்களுக்கிடையே உள்ள சமய வாழ்வைப் பற்றியும் எடுத்துக் கூறினர். அவர்களின் மூதாதையர்கள் நீலகிரியில் உற்பத்தியானவர்கள். காராம் பசுவிலிருந்து தோன்றியதால் கோத்தர்கள் என்று அவர்கள் அழைக்கப்படுகின்றார்கள். அவர்கள் ஏர்சாஸ்திரம், சினை சாஸ்திரம் என்னும் இரண்டைப் பின்பற்றி வருகிறார்கள். சினைசாஸ்திரப்படி மூன்று மாடுகளின் பாலைக் கறந்து ஓர் அறையில் வைத்துவிடுவார்கள். அடுத்தநாள் காலையில் அறையைத்திறந்து பார்த்தால் பால் தானாகவே பொங்கி இருந்தால் அவ்வாண்டு நல்ல மழையும், மகசூலும் இருக்குமாம். காலையில் அறையைத் திறந்து பார்க்கும்பொழுது பால் பொங்காது இருந்தால் அவ்வாண்டு நல்ல மகசூல் அமையாதாம். ஏர்சாஸ்திரப்படி ஜூலை மாதம் அறுவடை விழா நடைபெறும். விதைக்கும் காலத்தில் பூஜாரி ஏர் உழுது, விதை விதைக்கவேண்டும். அவர்களுக்குச்சாமையும், தினையும், அவரையும் முக்கிய உணவுகளாகும். அவர்களுக்கு வேண்டியபாத்திரங்களையும். ஆயுதங்களையும், விவசாயக் கருவிகளையும் அவர்களே செய்துகொள்கிறார்களாம். வீட்டுக்கு வேண்டிய குடம், மொந்தை ஆகிய பாண்டங்களைப் பூஜாரியே தயார் செய்வாராம். அவர் தயார் செய்த பாத்திரங்களைத்தான் அவர்கள் உபயோகிப்பார்களாம். அவர்களுக்குப் பக்கத்தில் உள்ள மலையில் இரும்புக்கல் கிடைக்கிறது. அக்கல்லை வெட்டி எடுத்து உருக்கினால் இரும்பு கிடைக்கும். அதைக்கொண்டு அவர்களுக்கு வேண்டிய ஆயுதங்கள் தயார் செய்துகொள்வார்களாம்.

கம்பட்ராயன், தொட்டினர், குன்னையனர் ஆகிய தெய்வங்கள் அவர்களுக்குக் குல தெய்வங்கள். ஒவ்வொரு பிறையிலும் கோயிலுக்கு முன் இருந்து வழிபாடு செய்வார்கள். ஆண்டுக்கு ஒருமுறை ஜனவரியில் கோயில் திறப்பார்கள். அன்று ஓமகுண்டம் வளர்ப்பார்கள். மரத்தைக் கடைந்தோ, கல்லைத் தட்டியோ நெருப்பை உண்டாக்கி அந்நெருப்பைக் கொண்டுதான் ஓமகுண்டம் வளர்ப்பார்களாம். நெருப்புக் குச்சியைப் பயன்படுத்தமாட்டார்களாம். அன்று பூஜாரி வீட்டில்தான் அனைவரும் உணவு உட்கொள்வார்களாம். அவர்களுக்கிடையில் மருள் ஒருவருக்கு வருமாம். அப்படி மருள் வந்தவர் சாமியாடி யாரைத் தொடுகிறாரோ அவர்தாம் பூஜாரியாக அமைய வேண்டுமாம். சாமியாடி ஒருவரைத் தொட்டு விட்டால் அவர் பூஜாரியாக இருந்தே ஆக வேண்டுமாம். அவர் ஆயுட்காலம் முழுதும் பூஜாரியாக இருக்கலாம். ஆனால் மனைவி காலமாகிவிட்டால் அவர் பூஜாரியாக இருக்க முடியாதாம். சக்தியில்லையேல் சிவம் சவம் என்னும் கோட்பாட்டிற்கு அது விளக்கமாக அமைந்திருக்கின்றது. மரணமடைந்தவர்களை எரிக்கின்ற பழக்கம்தான் அவர்களிடத்தில் இருந்து வருகின்றது.

அவர்கள் கிராமிய நடனம் ஒன்று செய்து

பாதயாத்திரிகர்கள் அனைவரையும் மகிழ்வித்தனர். கொல்லிமலை வாசிகளிடம் விடைபெற்றுக்கொண்டு பாதயாத்திரிகர்கள் மேலும் சுமார் நான்கு கி. மீட்டர் நடந்து பாலாடா என்னும் கிராமத்தை அடைந்தனர். அங்குப் பகலுணவு எடுத்துக்கொண்டு அங்கிருந்து மாலை 3-30 மணிக்குப் புறப்பட்டனர்.

வழியில் கேத்தி என்னும் முக்கியமான ஊரில் எத்தம்மன் ஆலயத்துக்குச் சென்று வழிபட்டனர். எத்தம்மன் என்பதற்கு ஆதிசக்தி என்பது பொருள். வழிபாட்டைமுடித்துக்கொண்டு மாலை ஐந்து மணிக்கு எல்லநள்ளி என்னும் ஊரை அடைந்தனர். ஆங்கு இருந்த ஆச்ரமத்தில் பாதயாத்திரிகர்கள் தங்குவதற்கு ஏற்பாடு செய்யப்பட்டிருந்தது. ஆங்கு இருந்த மாரியம்மன் கோவிலில் வழிபாட்டை முடித்துக்கொண்டு சற்குரு ஆச்ரமத்துக்குச் சென்று அமர்ந்தனர். ஆங்குள்ள மக்கள் அற்புதமாகப் பஜனை செய்தார்கள். அங்கு இரவு உணவு எடுத்துக்கொண்டு அங்கேயே பாதயாத்திரிகர்கள் தங்கினர்.

7—5—83 அன்று காலைப் பிரார்த்தனையை முடித்துக்கொண்டு காலை ஆறு மணிக்கு எல்லநள்ளி சற்குரு ஆச்ரமத்தில் இருந்து,

'ஹரே ராம, ஹரே ராம, ராம ராம ஹரே ஹரே' என்று பாதயாத்திரைக் குழுவினரில் பாதிப்பேர் நாமஜபம் கூற, மற்றும் பாதிப்பேர் "ஹரே கிருஷ்ண ஹரே கிருஷ்ண கிருஷ்ண கிருஷ்ண ஹரே ஹரே" என்று கூற அன்றைய பாதயாத்திரை தொடங்கியது. அங்கு அதிகாலை குளிராக இருந்தமையால் தேநீர் பருகி விட்டுச்சென்றால் நன்றாக இருக்கும் என்னும் எண்ணம் யாத்திரிகர்கள் உள்ளங்களில் எழுந்தது. தேநீருக்கு வேண்டிய பால் அப்பொழுது வராததால் அவ்வெண்ணத்தை நிறைவேற்றமுடியவில்லை. எல்லநள்ளியில் இருந்து ஐந்து கி.மீ. தூரம் வந்து அருவங்காட்டை அடைந்தபொழுது அருமையான தேநீர் தயார் செய்துகொண்டு வந்து, பாதயாத்திரிகர்களுக்கு வழங்குவதற்குக் காத்துக்கொண்டு இருந்தனர். பாதயாத்திரிகர்கள்மிகவும் ரசித்து அந்தத் தேநீரைப் பருகினார்கள். அங்கிருந்து புறப்பட்டு 7-55க்குக் குன்னூரில்உள்ள ஸ்ரீ சற்குரு ராஜயோக ஆச்ரமத்தை அடைந்தோம்.

தற்பொழுது குன்னூர் ஸ்ரீ சற்குரு ராஜயோக ஆச்ரமத்துத் தலைவராகிய தவத்திரு ராமலிங்க அடிகள் பாதயாத்திரிகர்களை அன்புடனும் முகமலர்ச்சியுடனும் வரவேற்றார். பிரார்த்தனை முடிந்தபின் பாதயாத்திரிகர்களுக்கு மூன்றாம் உறுதிமொழியாக இரவு படுக்குமுன் 'சுயநலத்தை மறந்து விட்டுப் பரநலச் சிந்தனையிலும், பரநலச் சேவையிலும் இன்றைய நாளில் எவ்வளவு நேரத்தைக் கழித்தோம்' என்பதை ஒவ்வொருவரும் எண்ணிப் பார்க்கவேண்டும் என்று கூறப்பட்டது. பாதயாத்திரிகர்கள் மௌனத்தின் மூலம் அதற்குச் சம்மதம் தெரிவித்தனர்.

காலை பத்து மணிக்கு அங்கிருந்து புறப்பட்டு அதற்குப் பக்கத்தில் உள்ள ஒட்டுப்பட்டரை என்னும் சேரி மக்கள் வாழ்கின்ற பகுதிக்குச் சென்றனர். சேரியைத் துப்புரவு செய்ய வேண்டுமென்று யாத்திரிகர்கள் திட்டமிட்டிருந்தனர். ஆனால் அவ்வூர் மக்கள் தாங்களாகவே தங்கள் வீடுகளையும், சுற்றுப்புறங்களையும், தங்களுடைய கோயிலையும் பெருக்கிச் சுத்தம் செய்து கோலமிட்டு அழகுபடுத்தி வைத்திருந்தனர். அவ்வூர் மக்கள் பஜனையுடன் வந்து பாத யாத்திரிகர்களை முத்தாலம்மன் கோயிலுக்கு அழைத்துச் சென்று தரிசனம் செய்து வைத்தனர். தரிசனத்துக்குப்பின் அவ்வூர் மக்களும் பாதயாத்திரிகர்களும் நர்த்தனத்துடன் பஜனை செய்துகொண்டு அச்சேரியிலுள்ள ஒவ்வொரு தெருவுக்கும் சென்று வந்தனர். ஒவ்வொரு வீட்டிலும் மஞ்சள் நீர் கொண்டு வந்து பக்தி உள்ளத்துடன் பாத பூஜை செய்தார்கள். சுமார் ஒருமணிநேரம் பக்தி உணர்வுடன் பாதயாத்திரிகர்களும் அச்சேரி மக்களும் ஈடுபட்டிருந்தது அன்றைய சிறப்பு நிகழ்ச்சியாகும். அந்நிகழ்ச்சிக்குப் பின் உடம்பையும் வீட்டையும் சுற்றுப்புறத்தையும் சுத்தமாகவைத்துக்கொள்வது பற்றியும், தெய்வநம்பிக்கை வேண்டும் என்பதுபற்றியும், புற மதத்தினர்கள் மதம் மாறும்படி தூண்டினால் அதற்கு வசப்படக்கூடாது என்பதுபற்றியும் எடுத்துவிளக்கப்பட்டது. ஐம்பது தாய்மார்களுக்குப் புதுச் சேலைகளும், ஐம்பது ஆடவர்களுக்குப் புதுவேஷ்டிகளும், துண்டுகளும் வழங்கப்பட்டன. சிறுவர் சிறுமிகளுக்குக்

கால்சட்டைகளும், மேல்சட்டைகளும், பனியன்களும் வழங்கப்பட்டன. சுமார் எண்ணூறு பேர்களுக்கு அன்று உணவு வழங்கப்பட்டது. பாதயாத்திரைக்கு ஏற்பாடு செய்த அன்பர் இவ்வுணவு வழங்கும் பொறுப்பை ஏற்றுக் கொண்டு சிறப்பாகச் செய்து முடித்தார். ஆண்டுதோறும் பாதயாத்திரையில் வழங்கும் உடைக்கு ஆயிரம் ரூபாய் வழங்கிவரும் அன்பர் இவ்வாண்டும் பெருமகிழ்வுடன் அத்தொகையை வழங்கினர். அதற்குமேல் மற்றோர் அன்பர் அறுநூறு ரூபாய் வழங்கியுள்ளார். மேலும் பாதயாத்திரையில் கலந்துகொண்ட அன்பர்கள் தலைக்கு ரூபாய் இருபத்தைந்துக்குக் குறையாமல் வழங்கினர்கள். இந்நிதிகள் உடை வழங்குவதற்கும், நாற்பது வசதியற்ற குடும்பங்களுக்கு முருகன் படங்கள் வழங்குவதற்கும் பாதயாத்திரைச் செலவுக்கும் பயன்படுத்தப்பட்டன. இப்பாத யாத்திரையில் பயன்படுத்தப்பட்ட நிதி உயர்ந்த லட்சியத்தை நிறைவேற்றப் பயன்படுத்தப்பட்டதாகும். ஞானயக்ஞத்துக்காக ஆண்டுதோறும் ஓர் அன்பர் ரூபாய் ஐந்நூறு அன்பளிப்புச் செய்து வருகிறர். அந்நிதியும் இவ்வாண்டு நல்ல முறையில் பயன்படுத்தப்பட்டது. பாத யாத்திரிகர்களின் சாமான்களை எடுத்துச் செல்வதற்கு ஓர் அன்பர் வாகனம் தந்து உதவுகின்றார். இவ்வாண்டு அவ்வாகனம் சாமான்களை எடுத்துச் செல்வதற்கும், உணவு வகைகளை ஆங்காங்குப் பாதயாத்திரை அன்பர்களுக்கு எடுத்துச் செல்வதற்கும் பயன்படுத்தப் பட்டது.

அன்று மாலை நாலரை மணிக்கு நிகழ்ந்த ஊர்வலத்தில் ஸ்ரீ ராமகிருஷ்ணர், ஸ்ரீ சாரதாதேவியார், ஸ்ரீ விவேகானந்தர் ஆகிய மூவர் திருவுருவப்படங்களும் அலங்காரம் செய்யப்பட்டு ஒரு வண்டியில்வைத்து எடுத்துச் செல்லப்பட்டன. ஊர்வலத்தின்போது ஒருவர் தேவாரம் பாட அது முடிந்ததும்கிளாரினட் குழுவினர் கிளாரினட் வாசித்தனர். அவர்கள் வாசித்துமுடிந்ததும் பாதயாத்திரை அன்பர்கள் நாமம் சொன்னூர்கள். அதற்குப் பிறகு ஸ்ரீவிவேகானந்தருடைய கருத்துக்கள் வாசிக்கப்பட்டன. இந்த முறையில் இரண்டு கிலோ மீட்டர் தூரம் ஊர்வலம் சிறப்பாக நடந்தது. பொதுமக்கள் இவ்வூர்வல நிகழ்ச்சியைப் பார்த்து மிகுந்த பயன் அடைந்தார்கள். குன்னூரிலுள்ள விநாயகர் கோவிலில் இவ்வூர்வலம் முடிவடைந்தது. தானவீரன் கர்ணன் என்னும் நாடகம் அதன் பின் திருச்சி கைலாசபுரம் ஸ்ரீசாரதா சேவா சங்கப் பள்ளி மாணவ மாணவிகளால் நடித்துக் காட்டப்பட்டது.

8—5—83 அன்று குன்னூர் விநாயகர் கோவிலுக்குப் பக்கத்திலுள்ள நாற்பது குடும்பத்தினர்களுக்கு முருகன் படம் வழங்கும் நிகழ்ச்சி பக்திபூர்வமாக நடைபெற்றது. மிகச் சிறிய இடத்தில் இரண்டு மூன்று குடும்பங்கள் வாழ்ந்து வந்ததை அப்பொழுது நேரில் கண்டோம். அம்மக்களுக்கு வாழ்வதற்குப் போதுமான வீட்டுவசதி அமையவேண்டுமென்று பாதயாத்திரை அன்பர்கள் அனைவரும் பிரார்த்தனை செய்துகொண்டனர். அந்நிகழ்ச்சிக்குப் பிறகு பகல் பதினொரு மணிவரையில் நாம ஜபம், தியானம், உபன்யாசம் முதலிய நிகழ்ச்சிகள் விநாயகப் பெருமான் ஆலய மண்டபத்தில் நிகழ்ந்தன. பதினொரு மணிக்கு மேல் பாதயாத்திரிகர்கள் பாதயாத்திரையைப்பற்றிய கருத்துக்களைத்தெரிவித்தார்கள். இவ்வாண்டுப்பாதயாத்திரை மிகச் சிறப்பாக அமைந்திருந்தது என்பது எல்லாருடைய கருத்தாக இருந்தது. அடுத்த ஆண்டு ராமநாதபுரம் மாவட்டத்தில் பாதயாத்திரை வைத்துக்கொள்ளலாம் என்னும் கருத்துடன் இவ்வாண்டுப் பாதயாத்திரையை மங்கலம் பாடி முடிவுக்குக் கொண்டு வந்தனர். அன்னதானம், அறிவுதானம், அருள்தானம் ஆகிய மூன்றும் இவ்வாண்டு யாத்திரையில் மிகவும் சிறப்பாக நிகழ்ந்தன.

---

## செய்திகள்

**நிகழ்பவை :**

குற்றுலம் ஐந்தருவி ஸ்ரீ ராமகிருஷ்ண ஆச்ரமத்தில் ஜூன் மாதம் 15 ஆம் தேதி பருவ அந்தர்யோகம் ஆரம்பித்துள்ளது. தொடர்ந்து ஆகஸ்ட் 15 வரையிலும் அது நடைபெறும்.

17—7—83 ஞாயிறன்று அருப்புக்கோட்டை ஸ்ரீ சாரதா சத்சங்கத்தின் இரண்டாவது ஆண்டு விழாவில் ஸ்ரீமத் நித்தியானந்த சுவாமிகள் கலந்துகொண்டு உரையாற்றுவார்கள்.

# ஸ்ரீமத் சுவாமி சித்பவானந்தர் அவர்கள்
## இயற்றிய நூல்கள்

| | | |
|---|---|---|
| திருவாசகம் | பிரசார விலை ரூ. | 23-00 |
| ஸ்ரீமத் பகவத்கீதை 14-ம் பதிப்பு | ,, ... | 18-00 |
| மஹாபாரதம் | ,, ... | 7-00 |
| இராமாயணம் | ,, ... | 5-00 |
| ஸ்ரீ தாயுமானசுவாமி பாடல்கள் | ,, ... | 6-00 |
| ஸ்ரீ ராமகிருஷ்ணர் உபதேச மஞ்ஜரீ | ,, ... | 5-50 |
| தினசரி தியானம் | ,, ... | 4-00 |
| ராஜயோக விளக்கம் | ... | 12-00 |
| கர்மயோக விளக்கம் | ... | 10-00 |
| பக்தியோக விளக்கம் | ... | 9-00 |
| ஞானயோக விளக்கம் | ... | 8-00 |
| பரமஹம்சரின் பெருமை | ... | 6-00 |
| ஸ்ரீ விவேகானந்தர் ஜீவிதம் | ... | 6-00 |
| கடவுளின் வடிவங்கள் | ... | 6-00 |
| சந்தேகம் தெளிதல் பாகம்—1 | ... | 5-50 |
| சந்தேகம் தெளிதல் பாகம்—2 | ... | 5-50 |
| விவேகானந்த விவரணம் | ... | 4-00 |
| ஸ்ரீ ராமகிருஷ்ணர் சரிதம் | ... | 3-50 |
| ஸ்ரீ சாரதாதேவியார் சரிதம் | ... | 3-00 |
| அனுஷ்டான வேதாந்தம் | ... | 3-00 |
| எதிர்கால இந்தியா | ... | 3-00 |
| திருக்கயிலாயகிரி யாத்திரை | ... | 3-00 |
| பஜனைப்பாடல்கள் | ... | 3-00 |
| தேவரகசியம் (முதலிய கதைகள்) | ... | 2-50 |
| **தாயுமானவர் இயற்றிய** | | |
| கருணாகரக் கடவுள் | விரிவுரை ... | 3-50 |
| பரிபூரணானந்தம் | டி ... | 3-00 |
| சின்மயானந்த குரு | டி ... | 3-00 |
| ஆனந்தமானபரம் | டி ... | 3-00 |
| சுகவாரி | டி ... | 3-00 |
| மௌனகுரு வணக்கம் | டி ... | 3-00 |
| எங்கும்நிறைகின்றபொருள் | டி ... | 2-50 |
| மலைவளர் காதலி | டி ... | 1-50 |
| பரசிவ வணக்கம் | டி ... | 1-00 |
| கண்ணன் என்னும் கடவுள் | ... | 2-50 |
| ஹரிச்சந்திரன் | (நாடகம்) ... | 2-00 |
| பாதுகாபட்டாபிஷேகம் | ... | [illegible] |
| விரதவீரர் பீஷ்மர் | டி ... | [illegible] |
| விபீஷணன் சரணாகதி | டி ... | 1-50 |
| பரமஹம்சர் பாமாலை | ... | 1-50 |
| காயத்ரீ | ... | 1-50 |
| நன்மக்களைப் பெறுதல் | ... | 1-50 |
| அமரநாத யாத்திரை | ... | 1-25 |
| செத்தவர்கள் நம்மோடு பேசுகிறார்களா? | ... | 1-25 |
| இறைவணக்கம் | ... | 1-00 |
| குழந்தைகளின் களிக்கூடம் | ... | 1-00 |
| இராவண தத்துவம் | ... | 1-00 |
| வாலி மோட்சம் | (நாடகம்) ... | 1-00 |
| தவப்புதல்வர்கள் | (நாடகம்) ரூ. | 1-00 |
| ஏகலைவ்யனின் குருபக்தி | (நாடகம்) ... | 1-00 |
| தானவீரன் கர்ணன் | (நாடகம்) ... | 1-00 |
| மார்க்கண்டேயன் | (நாடகம்) ... | 1-00 |
| பிரஹ்லாதன் | (நாடகம்) ... | 1-00 |
| தபோபலன் | (நாடகம்) ... | 1-00 |
| பார்வதி, லக்ஷ்மி, சரஸ்வதி கர்வபங்கம் | ... | 1-00 |
| இந்துமதமும் கிறிஸ்துவ மதமும் | ... | 1-00 |
| நோய்க்கு இடம் கொடேல் | ... | 1-00 |
| *ஆத்ம சக்தி | ... | 1-00 |
| *சக்தி தத்துவம் | ... | 0-90 |
| *சூரியநாராயணன் | ... | 0-75 |
| தெய்வீக மகிமைகள் | ... | 0-75 |
| *ஆலய வழிபாடு | ... | 0-75 |
| *சிவதத்துவம் | ... | 0-70 |
| *மனிதனது நிஜசொரூபம் | ... | 0-70 |
| தாயுமானவர் ஆலயத்தில் தத்துவ அமைப்பு | ... | 0-60 |
| நன்னெறிகளும் அருள்வாக்குகளும் | ... | 0-60 |
| *கணபதி | ... | 0-60 |
| *முருகக் கடவுள் | ... | 0-50 |
| விஷ்ணு தத்துவம் | ... | 0-50 |
| கர்மகாண்டம்எது? ஞானகாண்டம்எது? | | 0-50 |
| வர்ணாச்ரம தர்மம் | ... | 0-30 |
| அருள் விருந்து 1 to 25 ஒவ்வொன்றும் | ... | 0-30 |
| விவேகானந்தரின் வீர கர்ஜனை | ... | 0-30 |
| The Bhagavad Gita (11th Imp) | ... | 24-00 |
| Tirukkural ( with plastic cover ) | ... | 8-00 |
| The Indian National Education | ... | 8-00 |
| Ramakrishna Lives Vedanta | ... | 8-00 |
| The Bhagavad Gita (Small Size) | ... | 6-00 |
| Man [illegible]king Message | ... | 7-00 |
| Ra[illegible]ayana (with plastic cover) | ... | 7-00 |
| Mahabharata ,, | ... | 6-00 |
| Daily [illegible]ne Digest (DELUXE) | ... | 6-00 |
| [illegible]ne Digest (Ordinary) | ... | 4-00 |
| [illegible]-The Manifest Divinity ,, | ... | 6-00 |
| [illegible]cets of Brahman or The Hindu Gods | ... | 5-00 |
| Sri Vishnu Sahasranamá Stotram | ... | 4-00 |
| Siva Sahasranama Stotram | ... | 3-50 |
| Bheeshma The Superman | ... | 3-50 |
| Hinduism Hosts Christianity | ... | 3-00 |
| Holy Bible—In the Light of Vedanta | ... | 1-50 |
| Reminiscences of Master Mahashaya | ... | 1-50 |
| *Introducing the Gita | ... | 1-50 |
| The Garland of Paraaparam | ... | 1-50 |
| *Key to Higher Life | ... | 1-25 |
| *The Student | ... | 1-25 |
| The Teacher | ... | 1-00 |

தேவையான புத்தகங்களுக்கு உரிய விலையுடன் தபால் கட்டணத்தி[illegible] காக கீதை, திருவாசகத்திற்கு ரூ. 6-00ம், மஞ்ஜரீ, மஹாபாரதம், இராமாயணத்திற்கு ரூ. 1-80ம் தினசரி தியான[illegible] ரூ 1-40ம் மற்ற வெளியீடுகளுக்குரூ. 3-00 முதல் ரூ. 5-00 வரையும் சேர்த்து அனுப்புங்கள். *இப்புத்தகங்கள் [illegible] பெரிய புத்தகங்களில் அடங்கியுள்ளன.

# சந்தாதாரர்களுக்கு வேண்டுகோள்

மதமாற்றம், சமூகத்தில் காணப்படும் தர்மானுஷ்டானக் குறைவு இவைகளுக்குப் பரிகாரமாக மக்கள் மனதில் நல்ல உணர்வுகளைத் தூண்டி பக்தி வழியில் வழி நடத்துவதற்கு ஒரு நல்ல உபாயமாக தர்ம சக்கரம் மக்களில் பலருக்குக் கிடைக்கவேண்டுமெனக் கருதுகிறோம். நம் அன்பர்களில் பலரும் இக்கருத்தைத் தெரிவிக்கிறார்கள். ஆகவே நம் சந்தாதாரர்கள் தாங்களே தர்ம சக்கரத்தைப் பயன்படுத்தவும் மற்றவர்களுக்குத் தந்து படிக்க உதவவும் புதிய சந்தாதாரர்களைச் சேர்த்துத் தந்து உதவும்படியும் வேண்டுகிறோம்.

தர்ம சக்கரத்தில் வரும் விஷயங்கள் செய்தித்தாள்களில் உள்ளவை போன்று தாற்காலிகமானவைகளாக இல்லாமல் நிரந்தரமான தத்துவ ஆராய்ச்சிகளாக இருக்கின்றன. சந்தர்ப்பம் வாய்க்கும்பொழுதெல்லாம் திரும்பவும் வாசிக்கக் கூடிய ஒரு நூலாக இது அமைகிறது. ஆதலால் ஓராண்டுக்கான பன்னிரண்டு தர்ம சக்கர இதழ்களையும் பொருளடக்கத்துடன் பைண்டு செய்து வைத்துக்கொண்டால் அது ஒரு நல்ல புத்தகமாக அமையும். நாம் படிப்பதற்கும் மற்றவர்களுக்குப் படிக்கத் தருதற்கும் அது வசதியாக இருக்கும்.

ஆகவே அன்பர்கள் முயன்று புதிய சந்தாதாரர்களை அறிமுகப்படுத்திப் பலரையும் ஆத்மீக வாழ்க்கையில் ஈடுபடச் செய்யக் கோருகிறோம். குறிப்பிட்ட அளவே பிரதிகள் அச்சாக்கப் படுவதால் புதுப்பித்துக்கொள்ள வேண்டிய பழைய சந்தாதாரர்கள் உடன் புதுப்பித்துக்கொண்டு மற்றும் பலரையும் புதிய சந்தாதாரர்களாகச் சேர்த்துத்தரும் அருட்பணியில் ஈடுபடும்படி கேட்டுக்கொள்கின்றோம்.

பொருளாதாரத்தில் எந்த நிலையில் உள்ளவர்களுக்கும் தர்ம சக்கரம் கிடைக்கவேண்டும் என்னும் நோக்கத்துடன் சகாய சந்தா, சாதாரண சந்தா, டிபாசிட் சந்தா, அரசினர் நூல் நிலையங்களுக்கு இலவசமாக அனுப்புதல் ஆகிய முறைகளை நடைமுறையில் வைத்துள்ளோம்.

சந்தா விவரம் பொருளடக்கத்தின்கீழ் தரப்பட்டுள்ளது.

**ஸ்ரீ ராமகிருஷ்ண தபோவனம்**

திருப்பராய்த்துறை-639 115

திருச்சி ஜில்லா

Edited by SWAMI NITHYANANDA,
Printed & Published by Swami Sankarananda at Tapovanam Printing School, Tirupparaitturai, Tiruchi Dt.